உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருக்கோவையப்

பிள்ளைவிடுதூதின்மறுப்பு, என்கிற

சிசுதௌத்திய

# திரணசண்ட மாருதம்.

இஃது

கோயமுத்தூர்ச் சைவசமாஜீயர்

ஒருவராகிய ம-ா-ா-ஸ்ரீ,

சாமக்குளம்,

வெங்கடரமணதாசரவர்களால்

இயற்றி

சென்னை

ஸ்ரீதயாநிதி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

பார்த்திவ ௵ தை ீ

1886.

சிவமயம்.



# திருக்கோவையைப்
## பிள்ளைவிடுதூதின் மறுப்பு, என்கிற
# சிசுதௌத்திய திரணசண்டமாருதம்.



## முகவுரை.

சிசு=பிள்ளை, தௌத்தியம்=தூது, திரணம்=து( சண்டமாருதம்=பெருங்காற்று,எனவே, திரணப்பிராயம. பிள்ளைவிடு தூதென்னும் பிரபந்தத்தைத் துறப்பான் எ( சண்டமாருதமொப்ப இப்பிரபந்த மென்பதாயிற்று. திரல துரும்பு, என்பன ஒருபொருட்கிளவி. பிள்ளைத்தூதென்( தனித்துநிற்ந ஒரு பிரபந்தமாயிராது கிள்ளைத்தூதென்னும் ஞெரு பிரபந்தத்தோடிகலி அதனை மறுக்கப்புறப்பட்டது. ( ஙனமிருந்தும் அதனை ஈண்டுத் துரும்பென வுருவகப்படுத்தின மையால், அதுமோதிச் சலியாதிருந்த கிள்ளைத்தூது மலையெ ன்னு முருவகத்தை அருத்தாபத்தியாற் பெறும். பெறவே கிள் ளைத்தூது; சுருங்கச்சொல்லன் முதலிய பத்தழகோடு அளக்க லாகா வளவும் பொருளும் துளக்கலாகாநிலையுந் தோற்றமுமு டைய மலையொத் தழியாதிருந்ததென்பதூஉம், பிள்ளைத்தூது; குன்றக்கூறன் முதலிய பத்துக் குற்றங்களோடு இணைத்தென வறிதரேற்றுத விலகுந்துவ மாதிரொப்மையுடைய துரும்பொ த்தழிந்ததென்பதூஉம், போதருமெனக. பிறர்மனைத் துரும்பு கொள்ளான், துறவிக்குவேந்தன் றுரும்பு,எனத்துரும்பையும், குலமாகூறியில்லாருங் குன்றுபோனிற்பர், குணமென்னுங் குன் றேறி, என மலையையும், சிறுமை பெருமைகட் குவமையாக்கு மாறுணர்க. கற்புறுசிந்தைமாதர் கணவரோடன்றி அயலாரோ டுபேச நேர்ந்தவிடத்து அவரைத் துரும்பாக மதித்துப்பேச

ன்மரபு. சீதாதேவியார் அவ்வாறு இராவணனோடுபேசிய விதிகாசமுங்காண்க. அதுபோல யாமும் சமயக் கற்புடைமையாற் புறச்சமையத்ததாகிய பிள்ளைத்தூதைத் துரும்பெனக்கொண் டாமெனினு மமையும். பிள்ளைத்தூதை யாமேவலிந்து துரும் பெனப் பேசினேமில்லை. அத்தூதகத்துட்டானே அதனைச் * (சிறுதுரும்பு) என எடுத்தாண்டு இம்மறுப்புக்குத் தோற்று வாய் செய்தமைகாண்க.

அச்சிறுதுரும்பினைப் பொருட்படுத்து மறுக்காதொழிந்தா லென்னையெனின்; அது சமயவுணர்ச்சி முதிராத இளையார் கண்ணிற்படு மாதலானும், கண்ணிற்பட்டக்காற் கரிக்குமாகலானும், மறுக்கவேண்டிற்றென்க. அன்றியும் -690-691-ல் "பதி லெழுதிப் புத்தகரூபமாய் முழுதுங் கண்டித்துமொழி" என்று வாதுக்கு அறைகூவலான் மறுப்பெழுதலவஸ்யமாயிற்றென்க.

அற்றேற், சிறுதுரும்போ டெதிர்க்கச் சண்டமாருதமெழற் றிற்கெனின், நஞ்சுடைமையால் வலிந்தலுற்ற பாப்புச் சிறிதா யிருப்பினும், அதற்குப் பெருந்தண்டப் பிரயோகஞ் செய்தல மையுமென்க. செஞ்சாமாருதம் சூறைமாருதம் முதலியவற் றை வேண்டாதொழிந்த தென்னையெனின்? அவைகள் சண்ட மாருதமொப்ப அத்துரும்பை இத்தேயத்தினின்றும் எடுத்துக் கல்காணுத வேற்றுத்தேயத்து ளுய்க்கச் சாதனமாகாது துரு ம்பாகிய முதலையே நாசப்படுத்தும். படுத்தவே சண்டத்துரும் பாக்கொண்ட பிள்ளையுந்தூது மொருங்குகெடும். கெடவே தூதை ஜெந்தி சிசுஹத்தியாதிபழிசாரும், எனவொழிந்தாமென்க. இங் ஙனம் அறத்தாறிகவா தடைத்தபெயரே மறத்தாறிகவா மதலைத் தூதைமறுக்குமென்க. என்னை? "அழுக்காறவாவெகுளி யின் னாச்சொனான்கு மிழுக்காவியன்றதறம்" என்பவாகலின். அழு க்காறுதிய மறவிலக்கணங்கள், முழுதொருங் கமைந்தமையாற் பிள்ளைத்தூதை, மறத்தாறிகவா மதலைத்தூதென்றாம். வருமாறு-

---

* இது அவையடக்கம்.

அழுக்காறு; பிறராக்கம் பொறாமை. அஃதாவது கிள்ளைத் தூதின்கணுள்ள சொன்னயம், பொருணயமுதலிய பல வணிகளையும் வித்வஜ்ஜன சமூகத்தால் வியந்து பாராட்டப்படுதலை நோக்கிச் சகியாதெழுந்த பொறாமையாமெனக. அதனை இப்பிரபந்தம் 208-வது கண்ணிக்கீழ்க் குறிப்பினாலும், பிள்ளைத்தூது 702-"பற்பலவாமாலைகளாற் பார்த்தறியவிச்சித்து" என்பனவாதிப்பிரயோகங்களினாலுந் தெளிக.

அவா, ஆசை, அஃதாவது சர்வசாஸ்திரப் பிரவீணதையுடைமையாகப் பிறர் மதிக்கவேண்டுமென்னு மாசையாமெனக. அதனை வாதத்திற் கிசைவின்றிவலிந்து தம்பிரயோகமாய்ப் பிரயோகித்த "கோவை" என்னும் முதற்பெயரின் இலக்கணவிவாதமும், அவ்வாறே 266 - உதாரணத்தின்கீழ் ☞ அடையாளமிட்டுப் பிரயோகித்த இலக்கணவாதமும், அவ்வாறே 566-ல் "வெளிரப்பு" என்றதற்பிரயோகத்திற்குத் தார்க்கிகர்கள் பக்ஷங்கூறுதலும், 180 - இருவருடக்கெடு வேற்படுத்தலும், கலிவர்ச்சர ஆராய்ச்சியும், பிறவும் விளக்குதலாற் காண்க.

வெகுளி; அழுக்காறு அவா இவற்றின் ஏதுவாகப் பிறர்பால் வெருங்கோபம், அதனை முற்றிலுங் காண்க.

549 - இன்னாச்சொல்; வெகுளிபற்றிவருங் கடுஞ்சொல், அதனை நீசர், 686-கோபிலிகள், 60-அழியடா, 54 - படுபாவி நியமன்முதலிய பலகடுஞ் சொற்களாலுங் காண்க. இவற்றால் அதின் மறவிலக்கணம் சம்பூரணமா யமைந்தமைதெளிக.

இவற்றைச் சமயாபிமானம் பற்றிவந்த வெகுளியாதிகளாகக் கொள்ளாமோவெனின்? கொள்ளாம். கிள்ளைத்தூதோ பிள்ளைத் தூதாநுசாரச் சமயத்தைத் சற்றுந் தீண்டிலது. 145 "தீதாம்பதிநர் தெருத்தெருவாய்க் கோதுறவேவிட்ட புத்தகம்" என்றும், 443 "மாறும் பதிதர்செப்புமாற்றம்" என்றும், 405 "நெருப்பிடை வைப்பையில் என்றும், பலவாறுபிள்ளைத்தூதால் அரோசிக்கப்பட்டதெதுவோ அதைப்பற்றியே சிறிது பேசியது. அன்றியும் அது ஆக்கியோரது சுயசரிதமேயன்றிச் சம

யவாதத்திற்காகப் போந்த நூலென்று துவசங்கட்டிச் சமயவாதத்துக் கென்றே எழுந்ததாய்ப் பலபிரபந்தங்களுள, 638 "ஈழத்துள்ளான்,என்று, கூறிய கிரந்தகர்த்தா முதலாயினோராற் செய்யப்பட்டுள்ளவசனப் பிரபந்தங்களும், சபாபதிநாவலராற் செய்துள்ள "ஏகசமத சங்கற்ப நிராகரணம்" முதலியசெய்யுட் பிரபந்தங்களும்,இதுகாறும் மறுப்பின்றிக் கிடத்தலினானும், நேரே வாதுக்கேற்கும், அவற்றோடு வாதாடாது ஈங்கு வீணே விதண்டாவாதம் செய்யப் போந்தமையானும், சமையாபிமானம்பற்றி எழுந்ததன்றெனை மறுக்க.

அற்றேல் ; அவ்வாறு கிள்ளைத்தூதின் மீதும் அழுக்காறுதிய சாராவோவெனின் ? சாரா. கிள்ளைத்தூது முன்னர்க்கூறியாங்குப் புறச்சமயத்தாரோடு பயிலும் சிறுவர்க் கறிவுறுத்தக்கூறிய சுவானுபவ சரிதமேயன்றிப் பரசமய நிராகரணநூலொன்றன்றாகலானும், அது நமது நகரத்துச் சைவவேளாள வாலிபரொருவர் விவாக மின்மையாற் கிறிஸ்துமதப் பிரவேசஞ்செய்யமுயன்றமை யுணர்ந்த வெம்மனோர் வேண்டுகோளின் மீது "சைவசமயத்தவர்கள்பொருட்டு" என முகவசனத்தோடு பிரசுரிக்கப்பட்டிருத்தலினானும், என்க. அன்றியும் கிள்ளைத்தூது இருபது வருடங்களின் முன்னர்த் தோன்றியதென்று 68-லும் அது தோன்றுங் காலத்துப் பிள்ளையே விகசிக்கவில்லையென்று 69-லும் பிள்ளை, பருவமடையுந் தனையும் அது வாளாகிடந்ததென்று 72-லும் பிள்ளைந் தூதோதுகையால் அழுக்காறுதிய நிகழ்தற்குக் காரண மின்றென்க.

அற்றேல் ; அப்பிள்ளைத்தூதை மறுக்குமுரிமை யுமக்குரித்தோவெனின் ; மாறுகொண்டோ ரனைவரும் மறுப்பெழுதற்குரியாரே. அவருள்ளும் கிள்ளைத்தூ தாசிரியர் எமது தமிழாசாரியராதலின் யாம் முதன்மையேமென்க. அவ்வுரிமை பற்றியே இதில் கிள்ளைத்தூதை யாம் எமதென்று பலவிடங்களில் எடுத்தாண்டதூஉ மென்க.

அற்றேல் ; ஆசிரியாபிமானம்பற்றிப் பிள்ளைத்தூதை வறிதேமறுத்தனிரோவெனின் ? இல்லை. அதிபிரபல பெருமியாய

ங்களைக்கொண்டே மறுத்தாம். புறச்சமய பக்கத்தை அச்சமய சாத்திரப் பிரமாணங்களும் உத்கிருஷ்டானுபவ யுத்திப் பிரமாணங்களுங்கொண் டொழித்ததன்றிப் போலிப்பிர மாணங்களை யாம் கையாண்டிலேம். ஆனால், சமாசாரப் பத்திரிகைகள்-காலதேச வர்த்தமானங்கட்கும், கதைகள் - விநோதங் கட்கும் பொருத்தமுடையனவன்றிப் பிள்ளைத்தூதில் உதகரித்தமைபோலச் சமய சித்தாந்தப் பிரமாண மாகாவென்றறிவுறுத்துமாறு இதில் 351-ல் கதையையும், 860-883-922-ல் சமாசாரப்பத்திரிகையும், சிறிது உதகரித்துக் காட்டினும்.

பிள்ளைத்தூது செய்யுளோடிகலிச் செய்யுள் வேடம்பூண்டெழுந்தமையா லிப்பிரபந்தத்தையும் செய்யுணடையாக வெழுத நேர்ந்தது. அந்நடைக்கிணங்க வாத விடயங்கள் சுருங்கினவேனும் பின்னர் வேண்டுங்கால் விரித்துரைக்கும் பொருட்டு இப் பிரபந்தத்தின் ஒவ்வொரு பாகத்துக்கும் தனித்தனி ஒவ்வொரு பிரபந்தம்போல நாமகரணஞ்செய் தமைத்தாம். எதிர்வாதமெவ்வாறிருப்பினும் அனேக சுபக்ஷசித்தாந்தங்களைப் பிள்ளைத்தூதின் சொந்தவாக்கியமாகிய இலச்சினையால் முத்திரித்திருக்கின்றே மாகையால் நம்மீது குறைகூற நிமித்தமின்றென்க.

“தோன்றுதோற்றித் துறைபலமுடிப்பினுந், தான்றற்புகழ்தறகுதியன்றே” எனின்? “தன்னுடையாற்ற லுணராரிடையினு, மன்னியவவையிடை வெல்லுறுபொழுதினுந்,தன்னைமறுதலை பழித்தகாலையுந், தன்னைப்புகழ்தலுந் தகும்” என்றமைக.

இங்ஙனம்,

சாமக்குளம்

**வெங்கடரமணதாஸ்.**



☞ இப்புத்தகத்தை அச்சிடுவதில் நேரிடும் காலதாமதத்தையும், அதிகச் செலவையும், மட்டுப்படுத்தும் பொருட்டுப்; பிழையறவெழுதிய நம்துகையெழுத்துப் பிரதிக்கு ஒப்ப அச்சிடும்படி நமது நண்பராகிய சென்னைவாசி யொருவருக்கு அனுப்பியிருந்தாம். அவர் அச்சுப் பரிசோதனையில் சில எழுத்துக்களைத் தப்பவிட்டனர். இதனைச் சாதாரணமாய்ப் பார்ப்பவர்கட்கும் அவைகள் அவ்வண்ணம் நேர்ந்தன வென்பது விளங்கும். அவற்றிற்குத்தனியான சோதனபத்திரம் அனுவசியமென்று விடுத்து ஆங்காங்கு திருத்தியிருக்கின்றும்.

சிவமயம்.



திருக்கோவைப்

பிள்ளைவிடுதூதின் மறுப்பு என்கிற

# சிகதௌத்திய திரணைசண்டமாருதம்.



கடவுள்வாழ்த்து.

வெண்பா.

பிள்ளைவிடுதூது பிழைபடுதூதாய்ப்பார்க்
கொள்ளைத்திரணாய்க் கூறியே—நள்ள
மலைவில்லாரென்றும் மலைவில்லாவென்றுந்
தொலைவில்லானுஞ் சேடந்துணை.



தமிழ்ப்பிராசிரியர் பெருமை.

கலிவெண்பா.

சீராருங்கோவைத் திருநகரிலோலஞ்சேர்
பேராருஞ்செல்வப் பெருக்காளன்—சீரார் (௧)
சடிலத்தார்கன்புடையான் சந்திரசேகரசோ
ரடியனுமானவக ஞானன்—கொடியோ (௨)
ரவையகத்துக்கஞ்சாத வாற்றலுளான்மெய்ந்நூ
லவையகத்தும்வல்லமைசே ரேந்தல்—சுவையகஞ்சேர் (௩)
நீந்தமிழினுற்கவியுஞ் செப்புங்கவிராயன்
வேந்தர்களுமெச்சும் விறலுடையான்—யாந்தகவா (௪)
யெவ்வளவுபேசற் கிசையுமோசற்கீர்த்தி
யவ்வளவுந்தன்பா [illegible]— [illegible] ( )

பொய்ப்பொருளாய்ப்பேரரவைப் போக்கவசனியொப்பான்
மெய்ப்பொருளையாக்குவிக்கும் வேளாளன்—செப்புங் (௬)

குருவாயெனக்கியனூல் கூறியதனுண்மை
தருவான்பல்சற்குணங்க டாமே—யுருவாக (௭)

வந்ததெனவந்தவடிவந்தான் வன்புகழ்சேர்
கந்தசாமிப்பேர்க் கவிராயன்—சொந்தமா (௮)

முண்மைச்சரித்திரத்தை யோர்பிரபந்தந்தமைத்துத்
திண்மைபெறுமிந்நாட்டுச் செல்வர்கடா—மன்மையுறு (௯)

தத்தஞ்சிறுவர்களைத் தத்தமதக்கல்வியிலுஞ்
சுத்தம்பெறுமொழுக்கந் தோன்மையிலு—நித்தம் (௧௦)

பயிற்றுதுவேற்றுமதப் பள்ளிகளில்வைத்துப்
பயிற்றுதலுமாங்கு பயில்பாலர்—குயிற்றியதோர் (௧௧)

கற்பனுமார்க்கத்துக் கற்பினையாற்பொய்ம்மதநூல்
விற்பனுகார மிகுந்தேறித்—தற்படிகச் (௧௨)

சுத்தமனஞ்சேர்ந்ததுவே தோற்றுதலான்மோகமுறப்
பித்துப்பிடித்துப் பெரிதலைந்தே—யுத்தமமாஞ் (௧௩)

சற்சமயக்கொள்கையினிற் சாராதசற்சமய
நற்சமயமென்றுள்ளோ நாட்டமுற்றுச்—சிற்சிலபே (௧௪)

ரவமாஞ்சமயந் தழுந்திடவுஞ்சிற்சிலபேர்
நவமாஞ்சமயங்க ளூட்டிடவும்—பவவேக (௧௫)

நாட்டமுற்றுச்சிற்சிலபேர் நாஸ்திகராமாய்ந்திடவு
மீட்டலுறும்பொருண்மேலிச்சைவைத்துக்—கோட்டிகொண்டு

மேலுக்குவேடம் வெறுவேடந்தாங்கிடவு
நூலுக்கேவேறுபொரு ளுரைக்கிடவும்—ஏலுமிவை (௧௭)

பேதிக்கப்பேரூர்ப் பெருமான்மேற்கிள்ளைவிடு
தூதென்றொருநூலைச் சொற்றனனாற்—றீதெநான்று (௧௮)

விர்நாலேச்சைவர்களே யேற்கவெனக்காப்பளித்தங்
கந்நாலையர்சி லமைவித்தான்—அந்நாலைத் (௧௯)

## இந்நூல்செய்தற்குக்காரணம்.

தாம்வலியக்கையேற்றுச் சாமிநாதப்பிள்ளை
யாம்விவிலியத்தோ ரகங்கரித்துத்—தாம்விருப்புஞ் (௨0)

செல்வம்பெறவிதுவே செவ்வியென்றுதேர்ந்துதமைப்
பல்விஞக்கேட்டதுபோற் பாவித்துச்—சொல்விளம்பிப் (௨௧)

பிள்ளைவிடுதூதென்று பேரிட்டுக்கிறிஸ்தவர்த
முள்ளந்தனைச்சூதோதித் திரித்து—மெள்ளப் (௨௨)

பொருள்தேடியச்சியற்றிப் புத்தகம்போல்விட்டார்
மருளால்தனின் மயங்கி—யிருளாலே (௨௩)

போற்றியதுவுமொரு புத்தகமென்றெண்ணுமற்
றேற்றிமெஞ்ஞானச் சுடர்கொளுவி—மாற்றியே (௨௪)

* கற்பனவூழற்றார் கல்விக்கழகத்தாங்
கொற்கமின்றாத்தை வாயங்காத்தன்—மற்றுத்தம் (௨௫)

வல்லுருவஞ்சன்மி னென்பவேமாபறவை
புல்லுருவஞ்சுவபோ லென்று—நல்லோ (௨௬)

ருரைத்தவுரைக்கோ ருதாரணமாமென்று
நிரைத்தன்கடற்புவியோர் தேர்ந்து—புரைத்திரள்சே (௨௭)

ரப்புத்தகத்தையோ ரப்புத்தகமாக்கத்
தப்புத்திரள்கொண்டு சாதிப்பாந்—தப்போ (௨௮)

மணற்சோற்றிற்கல்லாராய் வாரொத்துநாடி
எணற்கரிதாகத் திரண்டதேலுங்—கணித்தவர்றுண் (௨௯)

---

* நீதிநெறிவிளக்கம்.

யிங்கபலவற்றை விரித்துரைத்தாமற்பமாந்
தொக்கசிலவற்றைத் தொலைத்தனமாற்—றக்கோரே (௩௦)

## தாதிலக்கணவாராய்ச்சி.

தாதென்றுபேரிட்டுச் சொற்றதினாற்சொற்றவந்தத்
தாதுக்கிலக்கணமுன் சோதிப்பா—மோதுமின்றே (௩௧)

தாதுநன்காதலர்பாற் றாதும்பகைவர்பாற்
றாதுமெனவிரண்டாச் சொல்லுவரத்—தாதுக்குண் (௩௨)

முன்னையதியார்மாட்டு மொழியலாமன்புபற்றிப்
பின்னையதவ்வாறேனும் பெற்றியதோ—பின்னையதுஞ் (௩௩)

சொன்னத்தைச்சொல்லல் சுயமாய்வருந்துரைந்த
லென்னப்படுமே யிருவகைத்தாப்—பன்னுமந்த (௩௪)

வொன்னலர்பாற்றாதுக் குயர்திணையாரேயுரிய
ரன்னவருட்சாமான்ய ராகாரே—யன்னவர்த (௩௫)

மாற்றலதனை யனந்தவிதமாயறிஞர்
போற்றியெடுத்துப் புகழ்வரன்றே—தோற்றுமுயி (௩௬)

ரில்பொருளும்வேறொருவ ரேற்றுய்க்கக்காதலர்பாற்
செல்கையினாற்றாதென்று செப்புகினு—மல்திணைபோற் (௩௭)

றாதுக்குப்பிள்ளையினைத் தாண்டுவரோதாண்டுகினுந்
தீதுற்றுக்காதலனுஞ் சீறுமே—தாதை (௩௮)

* இயம்புகின்றகாலத் தெகிளமயில்கிள்ளை
பயம்பெறுமேகம்பூவை பாங்கி—நயந்தகுயில் (௩௯)

பேதைநெஞ்சந்தென்றல் பிரமரமீரைந்துமே
தாதுரைத்துவாங்குந் தொடையென்று—ராதலினாற் (௪௦)

பிள்ளைவிடுதாது பிழைபடுதாதேயாயிற்
றெள்ளவுறுந்தாதியார்பால் யாதுகுறித்—துள்ளதென (௪௧)

---

* இரத்தினச்சுருக்கம்.

வாராயிலைத்தூதனைத்தினிலுஞ் சூசைக்கு
நேராச்சொலும்விஷய நிர்விஷயம்—பேரவற்கு (௪௨)

வைத்துவிட்டுமுன்னை மரிபெற்றபிள்ளையைப்போ
லெத்திப்பிறர்பா லிசையென்று—நத்துபிறர் (௪௩)
695

695 690-692
நட்புக்கேயென்றுமவர் நன்மொழியையேற்றுவந்து
திட்பமுடனேதம்பாற் சேர்கவென்று—முட்பகையாற் (௪௪)

65—78
றூதுரைக்கச்சூசைவந்து சொல்லியுளானென்றுமெதிர்
வாதுரைக்கவேதூது வந்ததென்றும்—வேதகமாக் (௪௫)
685—689

கூறுதலுமன்றிக் குளறுபடிபேசிமத
மீறுமதன்முகப்பின் மோலொன்றின்—மாறுகொண்டே (௪௬)

வந்ததென்றுங்கூறுதலான் மாற்றலர்பாற்றூதுசொல
வந்ததென்றுநிச்சயமா வைக்கலாம்—வந்தவந்த (௪௭)

மாற்றலர்பாற்றூதைமகவின்சிறுதோண்மே
லேற்றறகவன்றுலிதுநிற்க—வேற்றுத் (௪௮)

## பிழைத்தொகுப்பாங்கேற்றல்.

தளைவிரவாக்கற்புடையதாங்கலிவெண்பாவைத்
தளைவிரவக்கற்பில்லாதாக்கிப்—பிளைக்கலிவெண் (௪௯)

பாவென்றூர்பாப்புவினைப்பாப்பாவாம்பிள்ளைகள்பப்
பாவென்றுகூறுதலைப்பற்றியோ—பாவிசைக்க (௫0)

வாசைகுறையாதகங்கரித்ததன்றியத
ஞேசைகுறையாதமைக்கவொண்ணலையே—சூசைவந்து (௫௧)

75-698-428-429.
சிருந்தழையவருள்செய்ததுதான்பாவிலுள்ள
சீருந்தலையுஞ்சிதைப்பதற்கோ—நேராக (௫௨)

ஞான ரசஞ்சுவைசவந்து கல்வியதாற்பாவிலுள்ள
கானரசமெல்லாங்கழிந்தனவோ—நோனுரை (௫௩)

வெல்லென்றமாற்றம் வெதிரேகமாத்தமிழைக்
கோல்லென்றுசொல்லிக்கொடுத்ததோ—கவ்வி (௫௪)

பழுத்துவழுத்தென்று பகர்ந்ததாலாங்கே
எழுத்துவழுத்திரள்வக் தெய்தினவோ—கழுத்தினிலே (௫௫)

சொற்சோர்வுறுபவனைச்சொற்சோர்வறவேண்டிற்
சொற்சோர்வுறுமன்றிச்சோர்வறுமோ—விற்பனரே (௫௬)

* யேட்டிலடங்காவெழுத்துவழுச்சொல்வழுக்கள்
பாட்டிலடக்கிக்காட்டற்பாலவன்றே—பாட்டைக் (௫௭)

கலிவெண்பாவென்றதிந்தக்காலப்பேரேற்ற
கலிவெண்பாவென்றுகாட்டற்கோ—மலிவா (௫௮)

யொருபுகழுங்கோவைக்குரையாதுவாளா
திருக்கோவைத்தூதென்றுசெப்பிப்—பெருகவத (௫௯)

னுள்ளுரையிலேசரேத் தூரினையும்பெத்தலேம்
விள்ளும்வேற்றூரும் விளம்பியே—யெள்ளுதலாற் (௬0)

கோவையின்மேற்றூதென்னக் கூடாதேகோவைக்கிங்
காயபொருள்பிறிதே யாகுமாற்—றீயர்சிலர் (௬௧)

வாழைப்பழத்தினையே வாயைப்பயமெனல்போற்
கோழைதனைக்கோவையென்றுட். கொண்டதன்பாற்—பீழை.

---

* இதன் விரிவை நமது நண்பர் பிரசுரித்துள்ள பிள்ளைவிடுதூதாபாசவிளக்கத்திற் காண்க.

யுடைமைதனைமறைத்து மோர்குறிப்பாற்காட்டி
மடமைவெளிப்படுத்து மாண்போ—திடமுடனே (௬௪)

* மெய்யேயெக்காலத்தும் வெல்லுமன்றிவெல்லாது
பொய்யேயெனும்மொழியைப் போற்றுதற்கோ—ஐயமற

வேதமுணரோ மிதுவுமதியற்புதமே
யாதிமுதற்பே ரமைந்ததுதா—னீதிநூல் (௬௫)

வல்லோரேசெந்தமிழ்நூல் வல்லோரேமாமறைநூல்
வல்லோரேயுங்கள் மதிவிளக்கா—மெல்லொளிதான் (௬௬)

தூண்டாவிளக்காச் சுடர்தலினூற்றூண்டுகோல்
வேண்டாதொளிருமது வேண்டவெடுத்—தாண்டதன்றித் (௬௭)

தானேயத்தூண்டு கோலுமென்றடங்காமை
தானேயவையடக்கஞ் சாற்றிவிட்டுத்—தேனுறுங் (௬௮)

76—142

இன்னையிகழ்வென்று இருத்திரமம்பேசிநின்ற
பிள்ளையிகழ்வுஞ்சிறிது பேசுவாம்—பிள்ளையெனிற் (௬௯)

கிரிபணிற்பிள்ளைகிளிப்பிள்ளை மான்பிள்ளை
நரிகேளப்பிள்ளை நாய்ப்பிள்ளை—சாரிவரு (௭0)

நாகவாய்ப்பிள்ளைபிள்ளை நாடுமரப்பாய்பிள்ளை
சாகைமரம்வாழ்விலங்கின் றன்பிள்ளை—வேகமுள (௭௧)

பன்றிமுயல்பூனையின்ன பார்ப்பென்றபிள்ளையிவற்
றொன்றில்வரும்வாரா தொழிக்குதும்யா—மென்றாலும் (௭௨)

மக்கட்பிறப்பில் வரும்பிள்ளையாயதன்கட்
டொக்குறுபெண்ணுணலியாச் சொல்லுகின்ற—முக்கவராம்

---

* பிள்ளைத் தூதின் முகவாசம்.

ஆண்பிள்ளைந்தாதோ அலிப்பிள்ளைதன்றாதோ
ஆண்பயில்பெண்பிள்ளை யுறுதாதோ—காண்பரிய (எ௪)

வெட்டவெறும்பிள்ளை விடுதாதேயாகுமிங்ஙன்
முட்டமுட்டத்தப்பா முடிந்திமோற்—கெட்டுக் (எ௫)

முன்னிலையுமோத்தடைவும்.

கிழிந்தபிள்ளையாயிடினுங் கிட்டிவந்தாது
மொழிந்தபிள்ளையாயினதான் மூகங்—கழிந்தபிள்ளை (எ௬)

தன்னைப்பொருட்படுத்தித் தக்கோரேயாமதன்றன்
முன்னிலையாயிந்நான் மொழிகிற்பாம்—இந்தகரைக் (எஎ)

கோவனுற்கண்டமையாற் கோவையெனத்தொன்மையுணர்
பாவலர்கள்கூறும் பரிசுணரா—மேவமூவா (எஅ)

லாயதெனவெள்ளி யதன்பெயரிந்நாண்மருவுங்
கோயையேதக்கதெனக் கூறிவள—மீயுயர்ந்த (எகூ)

விந்நாட்டையாய்ந்தனு ளிந்தியாவென்றமையா
லந்நாமம்பிள்ளைபொருட் டாளுகிற்பாம்—இந்நாட்கு (அ0)

* வாதப்பேரீதன் மரபெனநாற்பத்நொன்பான்
பேதவகுப்பாக்கிப் பிள்ளைந்துதி—லோதும் (அக)

---

* ஆசிரியநிகண்டு தெய்வப்பெயர்த்தொகுதி. (20)

வாதம் வளிகாலுலவைமாருத மருத்துமால்வாடை யெரிகோடைபவனம், வங்கூழரிக் கோதையூதையனிலங்கொண்டல் வாயுமால்பிலனுயிர்ப்புக், கூதிருலவியரீழல்வேற்றஞ்சதாகதி குறித்த காற்றேழைந்துபேர், கோடைமேல்காற்றினேடு கொண்டல்கீழ்காற்றென்பர் கூதிருடனூதையிருபேர், தீதிலாக்குளிர்பனிக்காற் றென்பர்வாடையும்வடக்தையுஞ் செப்பிடுங்காற், றிகழும் வடகாற்றென்பர்மலையாணிலந்தென்றல் சிறுகால்வசந்தனுடனே, ஓதுமந்தாநிலந் தென்றலின்பெயரென்பருயர்சூறைவளி சாரிகை, யோங்கு சுழல்காற்று வருசூறையின் பெயரென்றுரைத்தனர் தமிழ்ப்புலவரே. எனக்காற்றின் பொதுப்பெயர். ௩௫-ம் சிறப்புப் பெயர். ௧௪-ம் கூடி. (௪௯) ஆயாறுகொள்க.

விடையஞ்செலுநெறியே மேவிமறுப்பெய்த
வடைவேவகுத்தாமோத் தாக—விடையவிச்சை (அஉ)

பிள்ளையினிழிவு.

கொண்டவாண்பெண்ணிருவர் கூடவெண்செந்நீர்சேர்ந்து
பிண்டம்படவுதித்தபிள்ளையே—கொண்டவுரு (அங)

வாராயிற்பெண்ணு ணலியென்றுசொல்லுகின்ற
பேராலொன்றுங்காட்டாப்பிள்ளையே—நேராகப் (அச)

பாசப்பிணிப்பவிழ்க்கப் பார்ப்பார்சுள்ளாணியென்று
பேசப்படும்பொல்லாப் பிள்ளையே—நேசமொடு (அரு)

தீயென்றுநீரென்றுந் தின்னுவதுசோறென்றும்
பீயென்றுந்தோற்றாத பிள்ளையே—பேயொன்றுந் (அசா)

தீச்சமயத்தோர்பாழ் செவித்துவளர்ந்தங்கவர்தம்
பேச்சுப்பிதற்றிவரும் பிள்ளையே—ஏச்சடைய (அஎ)

வேதுவொன்றுமின்றி யிருக்கவுங்கண்ணீர்சொரிந்து
பேதுற்றழுதுழையும் பிள்ளையே—யாதங்கம் (அஅ)

மட்பாண்டத்துள்ளே மடக்கித்தருகவென்று
பெட்பாகச்சீறியழும் பிள்ளையே—யப்பனுட (அகூ)

னுண்ணுதற்குமாத்தாளோ டுண்ணுதற்குமொத்திசைந்து
பெண்ணுடனே . . . கையுறும் பிள்ளையே—விண்ணகத்துச்

சந்திரனைக்கூவித் . . . ன்றுதாய்க்குரைத்தும்
பிந்தியழைத்தும்வா . . . பிள்ளையே—புந்திகொள (கூக)

விந்நிலத்தில்வாழ்வோ ரியற்றுதலும்பேசுதலும்
பின்னுமுன்னுந்தோற்றாத பிள்ளையே—முன்னுணர்வு (கூஉ)

பேரச்சிறுகாற்பெருவிரலை வாயில்வைத்துப்
பிரியமச்சவைக்கும் பிள்ளையே—சேரவரு (. . .)

மேதிலார்நஞ்சை யெடுத்தருத்தினாலுமுணும்
பேதைப்பருவமுள்ள பிள்ளையே—போதிக்கு (௯௪)

மன்னைதனைப்பூச்சியா லச்சுறுத்தக்கோசமதிற்
பின்னைக்கைவைத்தழைக்கும் பிள்ளையே—மின்னியொளி(௯௫)

ருத்தமமாம்பொன்னை யுவர்மண்ணுக்கேமாறிப்
பித்தம்பிடித்துழலும் பிள்ளையே—யெத்திசையும் (௯௬)

மெச்சுபொருளகத்தின் மேவலறியாததனைப்
பிச்சுப்பிடுங்குகின்ற பிள்ளையே—யிச்சித் (௯௭)

தருவருக்காமற்றம் மசங்கதமுங்கொள்வோர்
பெருமடமையாலுவக்கும் பிள்ளா—யொருகான் (௯௮)

மறந்தறியாக்காதன் மணவாளனட்டைப்
பிறந்தவுடனேபிரிக்கும் பிள்ளாய்—சிறந்த (௯௯)

பழமைப்பால்சோறிவற்றைப் டாச்சிசேர்சோச்சிப்
பிழைபடவேபேசுகின்ற பிள்ளாய்—முழுதுங் (௧௦௦)

கொடியநோய்கொண்டாலுங் கோதுளதேதின்னப்
பிடிவாதஞ்செய்கின்ற பிள்ளாய்—மடிமேற் (௧௦௧)

சுரந்தமுலைப்பாலைச் சுரந்தளிப்பாள்சற்றே
பிரிந்தாற்புலம்புகின்ற பிள்ளாய்—அருந்தற் (௧௦௨)

கிசைந்துகல்விகற்க விசையாதுகன்னைப்
பிசைந்தழுதுநிற்கின்ற பிள்ளா—யிசைந்துநீ (௧௦௩)

யன்னைமுலைப்பாலை யருந்தலறிந்ததல்லாற்
பின்னையென்னநீயறிவாய் பிள்ளாய்மற்—றுன்னுடைய ௧௦௪

கையுமுலைமீது கண்ணுமுலைமீது
செய்கைமுலைமீது சேட்டையே—தொய்யு (௧௦௫)

முலையேகதியாய் முகம்வைத்துத்தூங்க
வலையேயப்பாலெதுநீ வல்லாய்—நிலையுணரா (௧௦௬)

தந்தைதான்யார்பெற்ற தாய்தான்யார்சார்பாக
வுன்றனக்கிங்குற்ற வுறவினர்யார்—சொந்தமுள (க0எ)

ஆரோதுநாடே துனதுவயதேதுனது
பேரேதிங்கொன்றுமில்லைப் பிள்ளையே—தூரோதும் (க0அ)

பொய்யேயுனைவளர்த்துப் போற்றுகின்றமாதாவோ
சையார்திருட்டுனக்குத் தாய்வீடோ—கையறியா (க0கூ)

வஞ்சம்பொறாமை வசைபேசலாதியவை
சஞ்சரிக்குமுன்றன் சகோதரரோ—வெஞ்சலிலாப் (கக0)

பேராசையேயுன்னைப் பெற்றெடுத்ததாதைகொலோ
வோரமொழிபேச லுயிரேயோ—சேரவே (ககக)

கோபம்ப்ரதாபங் கொடுமைதிரள்சுற்றமோ
பாபமேருபம் படைத்தனையோ—தீபம்போ (ககஉ)

லொத்தகுலத்தி லுதித்தமுதுகுரவர்
சித்தமொருமித்தளித்த சேயாகிற்—சுத்தமாத் (ககங)

தூதுக்கனுப்பத்துணியார் துணிந்தாலும்
வாதுக்கனுப்புவரோ மாட்டாரே—கோதில் (ககச)

தவங்கிடந்துபெற்ற தனையனேல்நின்னை
யவங்கிடந்ததூதுக் கனுப்பார்—பவங்கிடந்த (ககரு)

கள்ளப்புணர்ச்சிக் கருப்பமுற்றுக்கானகத்திற்
றள்ளிவிட்டபிள்ளைநீ தானேயோ—கொள்ளுகின்ற (ககசு)

நற்பீசத்தாற்பிறப்பு நண்ணுமற்பாழ்த்தகொடுந்
துற்பீசத்துற்ற சுதனேயோ—வற்பமா (ககஎ)

முய்கைக்காயிச்சகமே யோதிவெளிப்பட்டவுன்றன்
செய்கைதனிலுண்டோ சிறப்பதுதான்—கைகையெனப் (ககஅ)

பையலொடுமிணங்கிப் பாரிற்புரண்டமூது
தையல்சொற்கேட்பதுநின் றுலாட்டு—மெய்யாக (கககூ)

நண்ணுமுரியபொரு ளுடாதுதப்பர்த்தம்
பண்ணலுனக்குப் பழஞ்சோறு—நண்ணிப் (கஉ0)

பிணங்கிக்குறித்தபொருள் பேசறியாதூடிச்
சிணுங்கியழுவதுதான் சீராட்டுத்—துணைக்கையாத் (கஉக)

தாரணியில்வாழ்வோர் சலித்திகழக்கால்கொட்டிக்
கோரணிக்கூத்தாடலுன்றன் கொண்டாட்டஞ்—சீரணியுஞ்

சோறுகறிகிரையெனச் சொல்லிக்கன்மனையெல்லாம்
வேறுபிரித்தலுன்றன் மெய்யுணர்ச்சி—மாறியிரு (கஉ௩)

கண்மூடிக்குட்டிநரைக் காணுதுவே[illegible]யராப்
புன்மூடித்திட்டிப் புலம்புதலுன்—வ[illegible]யா (கஉ௪)

284-441
மாதர்வனப்பைமகிழ்ந்து புகழ்காமுகர்போ
லேதமுறுநின்வனப்பை யெண்ணியே—போதத் (கஉ௫)

தகக்கண்ணில்லாததோ ரந்தகரேயாகி
முகக்கண்ணும்பாசத்தான் மூடிப்—பகற்குருடாய் (கஉ௬)

வாயொடுகண்மூக்காதி வள்செவியாம்பஃறுளையும்
பீயொழுகநிற்கப் பெறுமுகத்தைத்—தீயுணர்வாற் (கஉ௭)

5
றாமரைகாணென்றுந் தலையோட்டினைமுகத்தோ
டேமமுறச்சேர்க்கு மிடைநிலையா—நாமநுதல் (கஉ௮)

6
சிங்காணிவில்லுஞ் சிறுபிறையுமாமென்றும்
பொங்குபெரும்பீழை பொருந்துகண்ணைத்—துங்கமுறு(கஉ௯)

6-7
பீளுருவும்வேம்பிலையு மேவுமென்றுங்கட்குழிமே
டானபுருவத்தைநெட் பூவாமென்று—மூனத் (க௩0)
7

துருத்திக்கிரண்டு துவாரமொத்துக்காலே
தரித்தியங்கவாங்கே சளியும்—வரத்திகழு (கருக)

7
மூக்கைக்குமிழா மொழியலாமென்றும்பன்
னூக்கைக்கொண்டுண்டி நசையுற்றி—யாக்கைக் (கருஉ)

கொருவாயிலாகிவெப்பு மூத்தையுமேநாறும்
பருவாயைநற்சேதாம் பல்லென்று—மிருகடைவாய் (கருங)
8

மூடியெனநிற்கு முகத்திருபாலாங்கவுளை
யாடியாமென்றும் வியர்வும்மமூக்குங்—கூடியுள (கருச)
8

9
கண்டத்தைச்சங்குங் கமுகென்றுங்கைம்மூலங்
கொண்டிருக்குந்தோளைக் குலவேயங்—தண்டென்றும் (கருரு)
9

பேசற்கும்பேழ்வாயாம் பெட்டியைமூடித்திறக்க
வாசற்கதவா வருமிதழை—யாசையினூற் (கருசு)

9
றுப்பென்றுஞ்செங்கீருந் துன்னீருஞ்சோறுமல
மப்பென்றிவற்றையுறு மாசயங்க—ளைப்பொதிந்து (கருஎ)

தோலாலமைத்த துருத்தியெனும்பாழ்வயிற்றை
யாலாணிலையென்று மாக்கைக்கோர்—காலாகுங் (கருஅ)
10

கம்பமிடைமூறித்துக் கட்டுதற்குநீட்டுதலுக்
கும்பொருத்துச்செய்தே யுளமுழந்தா—ளம்படுக்கும் (கருகூ)

• 11
புட்டிலென்றுமக்கம்பம் பூமிமிசைநிற்பதற்கு
மெட்டியடிவைத்தொருபா லேகுதற்குர்—தட்டையா (கச0)

12
நேர்ந்துவைத்ததோலடியை நீள்புத்தகமென்றும்
* பேர்த்துமதைமீமிசையாப் பேசிவைத்துஞ்-சோர்ந்துமொழி
12

கத்திக்குளறுதலைக் கண்டென்றுமேதையென்பு
பொத்துமுடலைத்தளிரின் பொங்கமென்றும்—மித்தைசொலி
12

வாழ்த்துவதைப்பார்க்கமெய்யால் வைவதுவேசால்புடைத்துப்
பாழ்த்தசரிதப் பசுங்குழவி—தாழ்த்தியவுன் (௧௪௩)

தீயகுணமனைத்துந் தீட்டவுலகமெலாங்
காயிதமாப்பொங்குங் கடன்மையா—மீயுயருஞ் (௧௪௪)

சாகைமரமத்தனையுந் தப்பாதெழுதுதற்கு
லேகினியாப்பன்னாளி லேகித்து—மாகாதே (௧௪௫)

லிச்சிறியபுத்தகத்தி லெவ்வாறெழுதியுன
தச்சிறுதிகாட்டி யறைவதுதான்—னிச்சம் (௧௪௬)

ஒறுக்கிவளர்பிள்ளைதனை யோங்கியெழுமீசை
முறுக்கிவளரென்றே மொழிவார்—பொறுக்கியாஞ் (௧௪௭)

சொன்னமதிநிற்குச் சுடுமெனினுநல்லுறுதி
யென்னமதிபின்னு மியம்புகிற்பாம்—முன்னங் (௧௪௮)

குழலினிதியாழினி தென்பர்தம்மக்கண்
மழலைச்சொற் கேளாதவரென்—றழகுபெற (௧௪௯)

13-14
வள்ளுவனார்சொன்னதயன் மைந்தர்மொழிதள்ளாதுட்
கொள்வர்பிறரென்றோ குறிப்பித்தாய்—பிள்ளையினைப் (௧௫0)

---

* கால்-பாதம்-

பெற்றோரதனுரையைப் பேரன்பாற்கொள்வரன்றி
மற்றோரதனைமதியாரே—கற்றோர்சொல் (௧௫௧)

காக்கைக்குத்தன்குஞ்சு பொன்குஞ்சாக்காணுமெனும்
வாக்கையுணரா மடமையென்னே—ஆக்கி (௧௫௨)

லமிழ்தினுமாற்ற வினிதேதம்மக்கள்
சிறுகையளாவிய கூழாங்—தமிழ்கற்று (௧௫௩)

வேற்றொருவர்பிள்ளைகையை விட்டுப்பிசைந்துழக்குஞ்
சோற்றையெவருண்ணத் துணிவார்க—ளாற்ற (௧௫௪)

லதிகாரமாண்பா லமைத்தாலுமேழை
மதிதூற்றிவேறு வகுக்கும்—விதிகாண் (௧௫௫)

## கிள்ளையினுயர்வு.

மழலையுடைமையினால் வைதாலும்வைய
மிழலைக்கிளியை வியக்குங்—கழகழவென் (௧௫௬)

110—133
றெத்தனைநீசொல்லா லெழுத்தாற்பொருடிரித்துக்
கத்தினுஞ்சாராக் கசடதன்பாற—பித்தனெனக் (௧௫௭)

77—87
காதைபலபேசிக் களித்தாய் பொருளுணராப்
பேதையுனையன்றிப் பிறர்யாரே—காதையிடைக் (௧௫௮)

கிள்ளைசிறப்பதுவே கேட்கப்படுவதன்றி
யெள்ளளவதில்யாதொன்று மில்லையே—தெள்ளுணர்வா (௧௫௯)

லீதுகதையீதுண்மை யென்றறியாநீதானோ
தூதுசொலநெஞ்சு துணிந்தெழுந்தாய்—மூதறிவோர் (௧௬0)

நின்போலுமுடர்மதி நோக்கமுன்னிலையாப்
பொன்போலுங்கிள்ளையினைப் புந்தியிற்கொண்—டன்போடு

பற்பலவாங்காதை படிப்பதென்றதேராம
லற்பமதியானீ யனர்த்தமுற்றாய்—பற்பலவாங் (கசுஉ)

தேயத்தாரக்கிளிமேற் றேடிப்பலபடித்தாற்
றாயசரிதச் சுகமென்றன்—ஞாயமன்றோ (கசுங)

கொள்ளிகொடுதென்றலையைக் கோதிமுடிப்பானென்னநீ
யெள்ளியதுவேமுடியு மேற்றமாப்—பிள்ளாய்நீ (கசுச)

அத்திநாமாலொன்றுஞ் சொல்லாதுவிட்டதெனை
நாத்திருட்டென்றாக நாட்டுமென்றோ—நேர்த்தியிது (கசுரு)

93—100

நன்னூலார்கிள்ளை நமோணுக்கர்க்குவமை
தந்நூலுட்கூறியது சத்தியமன்—றன்றே (கசுசு)

ரிழிவுயர்வாக்கொள்ளு மிலக்கணத்தைக்கொண்டு
மொழிவொனச்சொல்ல முயன்று—யழிதகையாய் (கசுஎ)

மற்றமாணுக்கர்க்கு மாறியுயர்விழிவாச்
சொற்றனரோசற்றே துணிந்துரைபா—யற்றதுவு (கசுஅ)

முண்டென்றுகூறி யுறுதிப்படுத்தளவுந்
தண்டமௌனந் தனையடைதி—சண்டை (கசுகூ)

வழிமறித்துச்செய்து மடிமாங்காய்போட்டுக்
குழியிற்பிணத்திழவு கொண்டாடி—யுழிதருவோய் (கஎ0)

மாணுக்கனுக்கிளியை வையென்றிங்கார்சொன்னார்
வீணுக்குரைத்த விதமெவனோ—மாணுக்க (கஎக)

னாகும்வகைபிள்ளைக் கமையுமெனக்குறித்தோ
சாகும்வரைகற்றலுஞ் சாராய்நீ—மூகையெபா (கஎஉ

விந்துமதத்துயர்வொன் றெள்ளளவுட்கொள்ளாம
லிந்துமதத் தப்பறைகளெல்லாமுன்—புந்திவைக்கச் (கஎங)
70
செய்தேனென்றாய்நல்ல செல்லவிட்டுத்தியகொரு
நெய்யரிமையன்றோ நிகர்த்தனையா—ஞெய்ய (கஎச)

கடைமாணுக்கற்குரிமை காட்டியநீமேலா
மிடைமாணுக்கற்சேர்வ தெங்ஙன்—கடையான (கஎரு)

101-102-103.
குன்றங்கள்சேருங் குறிஞ்சிநிலமுயர்வொன்
றின்றென்றுகூறு மிளஞ்சேயே—நன்றுநன்றிங் (கஎசு)

கேசுபிறந்ததுவு மேசுவினைப்பெற்றெடுத்த
கூசைபோய்நோற்கத் தொடங்கியது—மேசு (கஎஎ)

வருவான்பின்னென்றேயோ வான்சொல்லிவாழ்ந்ததுவுங்
குருவானமோசேக்கே கோவாறாய்—தருவான்முன் (கஎஅ)

றோன்றியதுங்கப்பனைகள் சொன்னதுவுநும்மதம்வே
ரூன்றியதுமாய்வை விலோதலெல்லாங்—கான்றிகழுங் (கஎகூ)

குன்றுவனமன்றியவை கூறுமிவையுணர்ந்தாற்
குன்றுவனமிழித்துக் கூறுவையோ—கன்றிநீ (கஅ0)

107-108
தத்தைதாதோதாது தானென்றாய்தான்வகுத்துந்
தத்தைதாதோதாது சத்தியமே—பித்தவுன்போற் (கஅக)

சொன்னத்தைக்கூடவது சொல்லாதோசொல்லுமெனத்
தன்னிச்சையாயுலகே சாற்றுங்காண்—முன்னர்நீ (கஅஉ)

தோத்திரித்தவேசு சுதனாய்ப்பிறந்தபொழு
* தேத்தியதுபிள்ளை யெனமொழிந்துங்—கூத்தாடிப் (கஅங)

---

* தேம்பாவணி காட்சிப்படலம் 73.

பிள்ளைவிடுதூதுக்குப் பேரிரவலோன் சூசை
* கிள்ளைமொழிபோற்பாடுங் கேட்டென்றுங்—தெள்ளு(கஅச)

மமிழ்துண்டுமிழ்ந்ததே யன்னமொழிபேசி
†தியிர்கொம்பினின்ற கிளியேபோற்—றமிலொத்துச் (கஅரு)

சூசையுடன்மரியுஞ் சொல்லரியநல்லமொழி
பேசிமகிழ்ந்தார் பெரிதென்று—நேசநீ (கஅசு)

கொண்டாடுந்தேவர்க் குவமைசொல்லிவீரமுனி
திண்டாடவிட்டான் றெருவிலுனை—மிண்டாக (கஅஎ)

வந்தக்கிளியை யனேகவிதமாயிகழ்ந்த
நிந்தையுன்றன்றேவர்கட நிந்தையே—கந்தால்கேள் (கஅஅ)

பாலைப்பழித்தமொழி பண்ணைப்பழித்தமொழி
வேலைப்பழித்தவிழி மெல்லியதா—நூலைப் (கஅகூ)

பழித்தவிடையெனல்போற் பாயிரத்திற்கிள்ளை
பழித்தமொழிக்கிர்த்தியென்று பன்னி—வழுத்தியவுன் (ககூ0)

மாமரிசொல்லுக்கே வசைவைத்தாய்வைத்தாய்மெய்
நீமறதிகொண்டுநில்லை நிற்கவைத்தாய்—சேமத் (ககூக)

சர்வாபத்தம்.

‡ தடங்குறுமயிர்க ளனைத்துநடுத்தீர்ப்புத்
தொடங்கும்வரைக்கிடந்து தூங்கிச்—சடங்கொண (ககூஉ)

டெழுந்துநல்லோர்சொர்க்கமுற வில்லார்நிரையத்
தழுந்துவரொன்றேத லகற்றிக்—குழந்தாய்நீ (ககூரு)

---

* தேம்பாவணி பாலமாட்சிப்படலம்-10.
† ஷை மகிழ்வினைப்படலம்-129.
‡ யோபு-XIV-12. 5-மோசே-XXXI-16.மத்-XXV-31—46

* சூசையிறந்து சுவர்க்கமுற்றானென்றும்பின்
னேசெழுந்தகாலத் தெழுந்துவந்து—தேசார் (க௯௪)

† முடிசூடினானென்றும் முன்னவன்பெண்டாகக்
கடிசூடியமரியின் கண்ணே—யடிசூடத் (க௯௫)

‡ திங்களனைவைத்தா டினகரனைமேனிவைத்தாள்
தங்குசெழுமீனைத் தலையில்வைத்தாள்—மங்கையென்று

|| மல்லாமலுன்சமயத்தார் மரித்துத்தீர்ப்புவரை
நில்லாமனிற்பார் நெடுவானத்—தில்லென்று (க௯௭)

மனதுக்கிசைந்தபடி வைத்துவைத்துப்பேசு
முனதுசரிதமுங்க ளூரிற்—கனசிரிப்பாய் (க௯௮)

நிற்கவந்தச்சூசை நினைத்தவுடனேவிரைந்து
சொர்க்கத்திழிந்துவந்து தோற்றமுற்றுப்—பற்செஞ்சி (க௯௯)

53
யென்மகற்குமாறு யெதிர்த்தவரைத்தூஷியென்றுஞ்
சொன்மலியத்தூதுதன்மேற் சொல்லென்று—நின்வருகை
73

68—72
பார்த்திருந்திரண்டாகும் பத்துவருடத்தளவுங்
காத்திருந்தேனென்றுங் கரைந்தானுங்—கீர்த்திபல (உ0க)

51 74
வந்ததாமோர்மயக்கம் வந்ததாமெஞ்ஞானந்
தந்ததாஞ்சாத்திரத்திற் சந்தேகம்—வெந்ததாம் (உ0உ)
52

---

* தேம்பாவணி உத்தானப்படலம்-26-70-71.
† ஷெ முடிசூட்டுபடலம்-27-28-
‡ ஷெ ஐயநீங்குபடலம்-46. திருமணப்படலம்-28.
|| ஷெ தூதுரைப்படலம்-11-26. ஞாபகப்படலம்-88-89.

18
மதனுமரைப்புமறியில்லும்விட்டுச்
சதகோடிவந்தனங்கள் சாற்றப்—புதனும் (உ0௩)

19
பாரதியுமாயிரம்மைப் பண்ணவனுஞ்செஞ்சிரத்தே
சேரவவரங்கைமலர் சேர்த்தினராஞ்—சேரவகை (உ0௪)

48-50
காணுமீசன் கவிழ்ந்துநின்றுணுமிந்த
வீணுதிவிணர் வெறுங்கதையாங்—காணுமுன் (உ0௫)

மலடிமகனூர்று மணற்றயிலங்தேய்த்து
நிலவுமுயர்கானலினன் னீராடிக்—குலமுயலின் (உ0௬)

கொம்பேறிவான்மரைப்பூக் கொய்துவந்தானென்றகதை
நம்பாதிருந்தாமிந் நாளதையு—நம்புவாங் (உ0௭)

* இன்னிவிடுதூது இளத்தும்பவனியையும்
வள்ளல்குருவாய்வந்த மான்பினையு—முள்ளியே (உ0௮)

---

* இன்னிவிடுதூது திருப்பேரூரில் நடந்த திருவிழா வைப வத்தையும், அத்திருவிழாக்காலத்து "சந்திரசேகரன்" என்னும் பெயரினையுடைய வாசிரியரை நூதனமாகக்காணப்பெற்றதையும்,அவ்வாசிரியரோடுசெய்த சம்பாஷணத்தையும்,அவ்வாசிரியர் செய்தபோதகத்தையும், தொகுத்த சமயச்சிறப்பையும் பேசியது.

அக்கின்னிதூது ; கொஞ்சம் பாவியதென்று 66-லும், இருபது வருடம் வாளாகிடந்ததென்று 68-ம், கிழிபட்டுக் கிழிபட்டு வந்ததென்று 69-ம், இடையில் தகரப்புள்ளி சேர்ந்த வெள்கல் தருந்தூதென்று 134-ம், குளறுபடித்தூதென்று 681-ம், பலவாறு நிந்தித்த பின்னித்தூதானது ; அதற்குமாறுக அதன் சொன்னயம், பொருணயம், அடைவு, முதலியவைகளை இச்சித்து, 15—50 சூசையும் பவனிவந்தானென்றும்,51-52. அவன் எதிர்நின்றுனென்றும், 52—75 பற்பல சம்பாஷணம் செய்தானென்றும், 603—615. தொகுத்த கிறிஸ்துசமயச்சிறப்பையும், பேசிக் கின்னித்தூதின் நடையையே பற்றுக்கோடாகப் பற்றியதுமன்றிச் சில செய்யுட்களையும் கவர்ந்தமை காண்கையால் இகழ்ச்சி புகழ்ச்சியேயாகி பின்னித்தூதின் அழுக்காறு வெளிப்பட்டதென்க.

யந்தப்படியுணக்கு மாகலாமென்றெழுந்த
சிந்தைகொடிங்கிவ்வாறு செப்பினைகொல்—புந்திகொளக்

கல்லூரியிற்சிறுவர் கட்குத்தரம்வகுத்து
கல்லுணர்வுபோதிக்கு ஞாயம்போ—லெல்லா (உக0)

மனிதர்களுமோர்தரமாய் மன்றுமைகொண்டே
யினிதாயவரவர்கட் கேற்பக்—கனிவாஞ் (உகக)

சரியைகிரியாயோகஞ் சார்ஞானமென்னற்
குரியவகுப்பாக்கி யுணர்வு—பெரிதுய்க்கு (ககஉ)

601—602
மெஞ்சமயம்போலவன்றி யெல்லிசெட்டிதன்கணக்கா
முன்சமயமும்பவனிக் கொவ்வுமோ—கொன்சேரும் (உகங)

யானைமதப்பட்டா லலங்காரமன்றிநாய்
தானுமதப்பட்டாற் சரியாமோ—லூனமின்றிச் (உகச)

சோடிக்கும்பூவதனைச் சூடுவார்மாமுடிமேற்
றுடிக்குப்பூவுந் தரிப்பாரோ—மோடிபெறுங் (உகரு)

கொண்டைமுதற்கோலமெலாங் கூந்தலுளாட்காகுமன்றி
முண்டைகளுக்கொண்டை முடிப்பாரோ—விண்டகிள்ளைத்

தூதிற்பவனிவளஞ் சொன்னாலும்பொய்யிலையே
யேதுக்குப்பொய்யே யிசைத்தனை நீ—தூததன்பாற் (உகஎ)

றெள்ளத்தெளியத் திருவிழாச்செய்தியையு
முள்ளதுணர்த்துக்குரவ னெண்பெயருங்—கள்ளமறத் (உகஅ)

தாரணியோர்யாருஞ் சரிசரியீதென்றுசொலப்
பேரணியாயுண்மையன்றோ பேசியது—கோரணியாச் (உகசு)

செத்தோனெதிர்வந்தான் செப்பினான்சேதியென்ற
பித்துரைபோலேதும் பிதற்றிலையே—யொத்திடநீ (உஉ0)

பங்குனியிற்செய்யும் பவனிசொன்னேனென்பாயேன்
மங்கிச்சடிதி மறைவானேன்—அங்கதிலும் (உஉக)
75
பாரதியேயாபிரம்பைப் பண்ணவனேயாதியனைச்
சேரவந்தாரென்றுநீ செப்பலென்னோ—வீரமுனி (உஉஉ)

வன்புரட்டுச்சொற்பம் வரைந்தான்பெரியபுரட்
டென்புரட்டுப்பாரென் றெழுதினைகொல்—பொன்றிடுங்காற்

* றூதுரைப்பான்மாண்டதாச் சொல்லியுளகூசையுன்முன்
னேதுவந்துநின் றதிளங்குழவி—யோதியதென் (உஉச)

427
றச்சருபமாமுன் சனித்திறந்தவச்சூசை
தச்சொருபமாவந்து சார்ந்தானோ—துச்சக் (உஉரு)

கனவுநனவாகக் கருதினைகொலாங்கே
நனவுகனவாகவுநீ நாடி—வினவி (உஉசு)

137
யரசமரத்தருகே யார்வந்தாரென்று
பரிகாசவார்த்தை பகர்ந்தா—யரசமரம் (உஉஎ)

விண்ணோங்கிப்பேரூரில் வீதியிடைநிற்பதனைக்
கண்ணோங்கிப்பார்நீயுங் காணலா—மண்ணோங்கு (உஉஅ)

† மானிடனுமாசிரியன் மற்றதன்பாலுற்றதனை
யேனிகழ்வாகக்கனவா மென்றனையோ—நீநற் (உஉகூ)

* தேம்பாவணி தூதுரைப்படலம்-33.

† கிள்ளைவிடுதூதில் சிவபெருமானே ஆசாரியராக வெழுந்தருளினாரென்ற தென்னையெனின்? பாவனை. அங்ஙனம் ஆசாரியரைச் சிவபெருமானாகப் பாவித்தல் நன்மாணாக்கர்க்குரிய கடமையென்க.

சொருபத்திருநாளே சொல்லிவெளிப்பட்டாற்
சொருபத்தொழும்பனெனச் சொல்லி—யருவத் (உ௩0)

தொழும்பரெல்லாங்கூடி வசைசொல்வரென்றேவன்றே
லெழுவாயமோசே முதலோரெல்லாம்—வெழுவாக்கி (உ௩க)

* விட்டதுவென்றுமனம் வெட்கியோஇந்துவந்து
திட்டவரிற்றப்பவகை தேடியோ—விட்டனையாற் (உ௩உ)

† கானமயிலாடக் கண்டிருந்தவான்கோழி
தானுமதுவாகப் பாவித்துத்—தானுந்தன் (உ௩௩)

பொல்லாச்சிறகை விரித்தாடினாற்போலுமே
கல்லாதான்கற்ற கவிகண்டாய்—மெல்லவொரு (உ௩ச)

51
மாமயக்கம்வந்ததென்றாய் வாயில்வந்ததெல்லாம்பின்
னீமயங்கிப்பேசல் நினைத்தேயோ—காமமுறு (உ௩ரு)

முங்கண்மறைகுசையினை யோரிடத்துந்தேவனென
வங்கிகரியா தகற்றிவைத்து—மங்கவனுந் (உ௩சா)

47-48
தேவனென்றுமற்றுமுள தேவர்பவுத்திரப்புண்
ணுவரென்றுங்கூறு மறிவிலியே—தேவனலாச் (உ௩எ)

---

* உ. மோசே-XX-4.
உ. ஷை XXXII. 1—6.
௩- ஷை XXVI-1.
ச. ஷை XXV. 3-5.
நியாதிபதி-XVII-XVIII.
உ. ராசாக்கள்-XXI-10—16.
சங்கீதம்-XCVII-7.
ஷை CXV-4—9.
ஏசாயா-XL-19-20.
ஷை XLIV-9-20.
† மூதுரை.

சூசையையுந்தேவனென்று சொல்லல்பவுர்திரமாங்
கோசப்புண்ணென்றே குறித்தடங்காய்—பேசுமெதிர் (உநஅ)

## தூத்து எனும் பதநிந்தியத்வ நிரசனம்.

வாதமதுமேற்கொள்ளில் வாதையனுவாதித்துத்
தீதகலச்சித்தாந்தஞ் செய்வதன்றி—நீதமது (உநகூ)

நீத்துத்தொடங்குமுன்னே நிந்தித்துநின்னைப்போற்
றூத்துவெனப்பேசத் தொடங்குவரோ—தூத்துவென் (உச0)

றேசுகினுமின்ன மிகழ்ச்சிமொழியனந்தம்
பேசுகினும் ஞாயம் பெறவிலையேற்—சீசியிது (உசக)

பிள்ளைமதியென்றுவிட்டுப் பேருணர்வோர்தோத்திரிப்பார்
கிள்ளைவிடுதூதினது கீர்த்தியையே—மெள்ளநீ · (உசஉ)

நாவின்வசந்தப்பியிக்கு நாட்டவந்ததூதிகழ்ச்சி
தேவினருள்வேறென்று செய்ததுபார்—பாவிற் (உசந)

134
றகரமெனுமெய்யிடையே தங்குதூதென்றாய்
பகரிலதுதூத்துவெனப் பண்ணி—நிகரிறுதி (உசச)

நீட்சியுறுதியல்பாய் நிற்கும்பதமிரண்டிற்
றாட்சியிலாவாக்கியமே தானாகிச்—சூழ்ச்சி (உசரு)

யடுதலிலாநல்லமிர்த மாராய்ந்தமைத்த
கெடுதலிலாத்திருப்பேரூர்க் கிள்ளை—விடுதூது (உசசு)

தூத்துவ்வென்றாட்டுமன்றித் துட்டப்பொருள்குறிக்குந்
தூத்தூவென்றோர்காலுந் தோற்றாதே—பாத்துண்ணை (உசஎ)

மாத்தூய்மையீதென்றுன் மாதாவேவாய்ப்பெயினுந்
தூத்தூவெனலுன் சுபாவமே—யேற்றதன்கீழ் (உசஅ)

உள்ளுரையிற்பாலற்குரியது தூத்தூவென்றாய்
பிள்ளைவிடுதூதன்றோ பெற்றதப்பேர்—துள்ளிநீ (உசகூ)

## சுயங்கிருதாபராதப்பிரகாசிகை.

210 185 381 91
துட்டனென்றுமற்பனென்றுந் தூர்த்தனென்றுநீசனென்றுந்
திட்டினாயெங்கள் சிவபெருமான்—றுட்டருக்குத் (உ௫0)

துட்டனுத்தூர்த்தருக்குத் தூர்த்தனுநீசருக்குக்
கிட்டவொணுநீசனு கிற்பனெனுங்—கட்டளையாற் (உ௫௧)

சொன்னயேயல்லாது தோடமிலையுன்மேலே
யின்னும்பலவு மெடுத்துமொழி—யன்றேனன் (உ௫௨)

110
|| அலற்றினனென்று யலறினதன்றேயவன்
றுலகறியக் கூறிவிட்டாயுனையே—தலைவியன்றன் (உ௫௩)

## பைசாசவாசநிக்காரம்.

துட்டத்தனமடக்கச்சூழ்ச்சிசெய்த நாலுகண்ணு
மூட்டனுறுங் காக்காயின் மூக்கனை—நெட்டையுறு (உ௫௪)

கையனைநீள நெட்டைக்காலனை யென்றழைத்துப்
பைதலுறுவித்த பழக்கத்தாற்—பொய்யதனைக் (உ௫௫)

51 —61
சற்றுவந்துபெய்ப்பெயர் போற் காட்டி மிரட்டவந்தாய்
சற்றுநின்று பேசுஞ்சமர்த்தறிவோ—முற்றுமுன்றன் (உ௫௬)

பேய்ப்புத்தகங்களிலே பேய்பேயென்றேலமிட்டு
வாய்ப்பிதற்றலன்றி வராலாறு—வாய்ப்பதிலை (உ௫௭)

* சித்தநிலைநிற்றலே தேவசெய்கைபேய்ச்செய்கை
சித்தவிகற்பங்கள் செய்வதெனு—மெத்தவது (உ௫௮)

|| அலறினன், தன்வினை. அலற்றினன், பிறவினை,
* தேய்பாவணி வாமனுட்சிப்படலம் 76,

† ‡ § [ம்
பாம்பென் றும், வேதனைகள் பண்ணலென் றும் பஞ்சமென்று
வீம்பன்றியுள்ள தொன்றும் விள்ளாது—நாம்பின்ன (உ௫௯)

ருன்னூலத்தாரச்சியற்றியுள்ள புத்தகத்திலதைப்
பின்குறித்தவாறுரைக்கப்பெற்றேமான்—முன்குறித்த (உ௬௦)

* வேகோவாசம்மனசென் றெண்ணிறந்தவாவிகளை
யேகோபித்துண்டாக வேயியற்றி—யோகோவென் (உ௬௧)

றெத்தனையோ நல்லவர மீந்தாரு மீந்தவந்தக்
கொத்தனையமேன்மைக் குணமவற்று—ளொத்தாம் (உ௬௨)

பிரகாசமட்சயமே பேய்லகு சூட்சம்
வரமாயுபர்நால் வரங்கள்—வரன்முறையே (உ௬௩)

யொன்றுபிரதாப முயர்ஞானமாகியுறு
மொவ்வேயிறவாமை யுண்டாக்கு—மொன்றதா (உ௬௪)

னெவ்வளவுதூரத்திடத்தும் போய்மீளுதலொன்
றெவ்வளவுகாப்புந் திருந்தாவு—மவ்விடத்திற் (உ௬௫)

‡ கேகிவரலாமிவர்க ளெண்ணிலவருக்குள் ளோர்து
ரோகியவன்பேரோ லூசிபெயென்பான்—யூகியாத (உ௬௬)

தன்னைமதித்தே தருக்கித் தன்கத்தனுடன்
றன்னைச்சரியாஞ் சமானமுற—வுன்னித் (உ௬௭)

---

† தேம்பாவணி ஞாயகப்படலம் 112,
‡ யோபு 1. 6—12 ஷை II. 1—8,
§ எரேமியா XIV. 1—8.
* மெய்மறையுத்தியானம் 2 காண்டம் 35 அத்தியாயம் 2-வது பிரகரணம். தேம்பாவணி வாமனுட்சிப்படலம் 72.
‡ பேய்களைக் கிறிஸ்துநாலில் உயர்திணையாகப் பேசப்படுகின்றது.

திராவருபிகளைச் சேர்த்தாருமெஞ்சுந்
திரளார்ப்ரமாணிகஞ் செய்தே—வரமுதவுங் (௨௬௮)

கத்தனுக்கே யாளாக்சலாபமற்று நின்றதனாற்
கத்தன் மகிமைக் கனத்துடன் மோக்—கத்தமர்த்தித் (௨௬௯)

தன்மனத்தினாலே துரோகஞ் செய்துள்ளாரைத்
தன்மனப்பேயாகச் சுகோரகில்—வன்மமுறத் (௨௭௦)

தள்ளினனாந்தள்ளுகினுந் தங்கட்கியல்பாக
வுள்ளகுணத்தினுயர்ச்சியினால்—வள்ளற் (௨௭௧)

குலகிடைமாறுவந் துயர்ச்சிபெறவெண்ணிப்
பலகலசமார்க்கனுக்குப்பண்ணு—மலகையா (௨௭௨)

மப்பேய்யிந்தியர்களாசரிக்குந் தெய்வமென்று
தப்போடனேகம்பொய் சாற்றுமா—லப்பேதை (௨௭௩)

மக்களிடருற்று வணாந்தவந்தப்பேய்க்கதைதான்
தக்கவர்கள் சொள்ளத்தகுவதன்றே—மிக்கறிவாம் (௨௭௪)

ஞானப்ரதாபமிவை நற்குணத்தை நல்குமன்றி
யீனம்பெறுங் குணங்களீயாதே—ஞான (௨௭௫)

முடையபொருளஞ்ஞான முற்றதென்றாற்சோதி
யடையுமிரு ளென்பதுபோலாமே—யுடைமையுறு (௨௭௬)

தேவனைலரடையச் செய்தவந்தச்சம்மனசு
பாவமதுசெய்யப் பயின்றதென்றாற்—றேவன்றான் (௨௭௭)

சுத்தனோசார்தல் சுபாவச்செயலதெனிற்
சத்தனோம்போல் வான்றானலனோ—எத்தியந்த (௨௭௮)

சம்மனசுக்குட்புகுதச் சாத்தானென்றுண்டென்னி
லம்மனசுக்குச் சாத்தா னார்படைத்தார்—சம்மனசும் (௨௭௯)

* மாறுகொண்ட துன்மனசும் மனிதர்மனசேயன்றி
வேறுகொண்டவீருயிராய் மேவியவோ—கூறிலவை (உஅ0)

யாதமுடனேவா ளவதரிக்குமுன்னுளவோ
வேதகமாய்ப் பின்பு விதித்துளவோ—வேதமெனக் (உஅக)

கொண்டவழுத்திரண்முன் கூறுமைக்கேதுவென்றே
மண்டுபெருங்கூட்டம் மறைந்தனவோ—பண்டையிலே

சம்மனசை நல்கியது தன் சுகத்திற்கோவந்தச்
சம்மனசுமோட்சசுகஞ் சாருதற்கோ—சம்மனசுட் (உஅங)

‡ சிற்சிலபேர்போர் புரிந்துஞ் சிற்சில பேர் தூதுரைத்துஞ்
சிற்சிலபேர்வேலை பலசெய்தலைந்துஞ்—சிற்சிலபேர் (உஅச)

$ குசைச்கு மற்றயர்க்குஞ் சொன்னவர்க்கெல்லாமமாளாக்
காசையடைந்து கனங்குலைந்தும்—வேசையொத்துச் (உஅரு)

சம்மனசுசிக்கித் தவிப்பதிலும் மாறுகொண்ட
துன்மனசுக்கன்றோ சுகமெனலாம்—துன்னிரயந் (உஅசு)

|| தள்ளினன்றேவனென்றாய் சாத்தானைப்பூமியின்வாழ்
வுள்ளளவுந் தள்ளிவைக்கவொண்ணுதோ—மெள்ள (உஅஎ)

வலையவைத்தானென்னி லருநரகிற்றள்ள
விலையென்று நிச்சயிப்பர்மேலோர்—மலைமலையாச் (உஅஅ)

சம்மனசுகோடிபுடை சார்ந்திருந்துந்தேவனிங்கு
நம்மவராலன்றோ நுழைந்துள்ளான்—சம்மனசு (உஅகூ)

---

* தேம்பாவணி வாமனுட்சிப்படலம் 73.
‡ ஷை இளவன்மாட்சிப்படலம் 48-49.
$ ஷை கருணையன்மாட்சிப்படலம் 93-131-132-153
|| ஷை வாமனுட்சிப் படலம் 78.

போர்பொருதிப் பேயைவெல்லப் போதாதேற்போதியபல்
லோர்திரளை யேனளிக்க வொண்ணாதிவ்—வூர்தனிலே (உகூ௦)

நீயிர்வருமுன்னே நிலைத்துநெடுநாளரசு
பேயிருந்தாற்றேவன் ப்ரதாபமென்னோ—பேயின் (உகூ௧)

அரசேயுன் மோசேக்கு மாதி யென்றுன் னூலே
பிரசுரிக்குமன்மற் றென்பேசல்—நரர்தம்மைப் (உகூ௨)

பைசாசுபித்தாகப்பண்ணிடுமேற் பண்ணியவப்
பைசாசைத்தண்டனைதான் பண்ணலன்றிக்—கைசோர்ந்த

மானிடரையோதேவன் வாட்டுவானையையோ
வேணிடர்ப்பட்டிவ்வாறியம்பு கின்றாய்—ஞானம் (உகூ௪)

முதன்மையுறுசம்மனசே மோசம் போமாறு
லதனையுறாரென்படுவரந்தோ—முதன்மையுட (உகூ௫)

னெண்ணிறந்தநல்வரங்களீந்துந்தன்னோ டெதிர்க்கப்
பண்ணுவனோ தேவன் பகைவனோ—மண்ணகத்திற் (உகூ௬)

றேவனுடன் வெற்றிபெறத்தேடுமேற் பேயினங்க
டேவப்படைப்பென்னச் செப்புவதற்—காவதுவோ (௩கூ௭)

யானையுடன் யானையமர் பொருதாலொத்ததன்றிப்
பூனையுடன் போரைப் புரியுமோ—சேனைகொடு (உகூ௮)

பேயனைத்துங்கொல்லப் பெயராதெளியவராம்
வாயில்லாமாந்தரையோ வாட்டுவதிங்—காயுங்காற் (உகூ௯)

கண்ணறையர்பாலினிறங் கண்டகதையாய்விடுநீ
மண்ணைதனைப்பேசி வகுத்தகதை—எண்ணாதுன் (௩00)

சாத்திரத்திற்கூறியபொய் சாதிக்கப்பொய்யினையே
கோத்திருக்குந்தன்மை குறிக்குங்காற்—கூத்திற் (௩0௧)

செருப்புக்குக்காலிணங்கச் செய்வதுபோற்சொன்னாய்
சிரிப்புக்கிடமாத்திகழும்—விரிப்பானேன் (௱௨)

கற்பின் வழுவியதோர் காரிகைகற் புள்ளாண்மே
லற்பாப்பழி தூற்றுமாற்றினையுங்—கற்பனையாச் (௱௩)

சோரன்றிருட்டதனைத்தோடமிலான் மேற்சுமத்திச்
சேரவழிபார்க்குந்திறத்தினையு—நேரவருட் (௱௪)

பெம்மானைப்பேயாப் பிதற்றியவனும் நிரயந்
தம்மாவெனக்கூயரற்றுதல்போற்—சும்மா (௱௫)

வரைந்தாய்நீபொய்மை மனம்போன போக்காக்
கரைந்தாயதில் ஞாயங்காணேம்—விரைந்தனது (௱0௬)

தேவே பேயென்பதனைத் திட்டாந்தமாக்காட்டி
நாவேயடங்க நவில்கிற்பாற்—சேவேயாங் (௱௭)

a. கன்றதனைக்கொன்று கறிசமைத்திட்டாலதனைத்
தின்றளவிலாமகிழ்ச்சி செய்வதுபே—யன்றொருவ (௱0௮)

b. னேடிரவிற்சண்டையிடை யூருவினையூறு செய்து
நாடிரவிகாணுமடெங்குதல்பேய்—கோடிலகு (௱0௯)

c. குன்றின் மரத்திற் குடியிருந்து கிட்டுபவர்
கொன்றுபயமுறுத்திக் கொட்புறல்பேய்—கன்றுறுமுட்

d. சின்னச்செடியருகிற் செந்தீயாய் நின்றெரிந்து
கன்னப்பேய்போற் பேசக்கற்பதுபேய்—முன்னமொரு

a. 1 மோசே XVIII. 8—9.
b. ௸ XXXII. 24—30.
c. நியாயாதிபதிகள் VI. 11-17—23.
௸ XIII. 15—22.
d. 2 மோசே III. 2—6

a. மாத்திரைக்கோறந்தந்த மாத்திரைக்கோல்கையாடப்
பார்த்தடங்கி வேதனைகள் பண்ணுதல்பேய்—சேர்த்தியிகு

b. சூனியத்தார்போலத் தொழுநோயைக்கைத்தலத்தான்
மேனிமிசைத்தோற்றி விளக்குதல்பேய்—தானினிய (௯௰௩)

c. னென்றுவைத்தோன்றன்னை இரவிலொரு சந்திரத்திற்
கொன்றுவைப்பனேரே குறுகுதல்பேய்—கன்றியுடன் (௯௰௪)

தன்மகவின் கோசாக்ர சர்மத்தைச்சேதித்துக்
கன்மவிசெந்நீராற் கலையுதல்பேய்—முன்மலிந்த (௯௰௫)

d. பாம்பொடு செந்நீர்தவளை பார்ப்புழுதிபேன்வண்டு
வேம்புறுநோய்கொப்புள மழைவிட்டிலிரு—ளாம்பலவுங்

e. காட்டியடங்காதவொரு காவலனாவதனின்
மாட்டித்தலைச்சன் வதைப்பதற்குங்—காட்டிக் (௯௰௭)

கொடுப்பதற்குந் தன்னினத்தைக்கொல்லாததப்ப
விடுப்பதற்கும் வீட்டுக்கதவின்—படிப்பழுவி (௯௰௮)

லாட்டிரத்தம்பூசி யடையாளஞ்செய்கவென்று
வாட்டமுறக்கூறி வகுப்பதுபேய்—வீட்டுத் (௯௰௯)

f. தலைச்சனையேகொல்லுந் தலைவனெனக்கூறி
தலைச்சனையேகொல்லல் தறுகட்பேய்—மலைச்சரிவின் (௱)

a. தேம்பாவணி இளவன்மாட்சிப்படலம். 25.
b. 2 மோசே IV. 6.
c. ௸ ௸ 24—26.
d. ௸ VII. VIII. IX. X.
தேம்பாவணி இளவன்மாட்சிமைப்படலம் 26—38.
e, தேம்பாவணி ௸ 41
2 மோசே XII. 7—13
f. 2 மோசே XII. 29-30.

a. மேகமிடிமின்னல் விறற்காளப்பேரோசை
யாகம்புகைவடிவ மாவதுபேய்—வேகமொடு (௱௨௧)

b. பாயுதல்பேய் சந்ததியைப் பற்றுதல்பேய் மிக்கெரிந்து
காயுதல்பேய் தீச்வாலை கக்குதல்பேய்—நோயுந் (௱௨௨)

c. தருவதுபே d. யுண்டிதருவதுபேய் e. தீயாய்
வருவதுபேய்நேர்ந்து f. பழிவாங்குதல்பே—யொருவா (௱௨௩)

g. விலங்குபறவைத்திரளை வெட்டிரத்தங்கூட்டிக்
சலங்குபலிபோடக் களிப்பதுபேய்—சலங்குலவு (௱௨௪)

முத்தியபேய்க்காதை மொழிந்தாஞ்சிலவினிமேற்
பிந்தியபேய்ச்காதைசிலபேசுவாம்—புந்திகொண்டு (௱௨௫)

h. பாரோராறியாமற் பர்த்தாவறியாமற்
றூரோதுகர்ப்பத்துறுவதுபே—யேரோதுக் (௱௨௬)

i. கஞ்சியூர்தோறு மலைவதுபேய் j பேய்களுடன்
மிஞ்சியுரவாடி வெளிப்படல்பேய்—கெஞ்சியுறுங் (௱௨௭)

a. 2 மோசே XIX. 16—19.
b. ஷை XIX. 22—24,
ஷை XX 5. 4 மோசே XI. 1-2.
c. 3 மோசே XXVI. 14—33.
d. 2 மோசே XVI. 13—15.
e. ஷை XXIV. 17 ஷை IX. 24.
f. ஷை XXXIV. 7.
g. 3 மோசே. I.
h. தேம்பாவணி ஐயந்தோற்றுபடலம் 66.
i. ஷை பைதிரநீங்குபடலம் 4.
j. மத்தேயு IV. 1—11.

a. கீழ்மக்கள் சார்பாற் கிளர்வது பே b. யற்பகோய்
கீழ்மக்களீங்கக் கிடைப்பதுபேய்—காழ்யலிந்த (௧௨௮)

c. பன்றிபலகொன்றழித்தல் பார்த்தெல்லை விட்டகல் நீ
என்றிகழக்கேட்டோட் டெடுப்பதுபேய்—நன்றியிலா(௧௨௯)

d ஊமைப்பேய்பேசக் கண்டுற்றபரிசேயரிதே
திமைப்பேயென்னத் திரிவதுபே—யூமைகண்முன் (௧௩௦)

e. வாயூரும் பேய்தனதுவார்த்தை மதியாரைவிட்டுப்
போ f. யூரைத்திட்டிப் புலம்புதல்பேய்—பேயிதனைக்

g. கொல்வாமெனச் சிலபேர்கூடினாலப் புரத்தே
செல்வாமென்றோடித் திரிவதுபேய்—பல்வேறு (௧௩௨)

h. மாயவித்தைகாட்டி மனிதருணவுண்ணுதற்கு
பாயவித்தைமாரீசம் பண்ணுதல்பேய்—சேயமுடன் (௧௩௩)

i. குட்டியுடன்றாய்க்கழுதை கொண்டுவந்து மேலேறித்
தட்டியடித்தோட்டுஞ் சவாரிப்பேய்—திட்டிமுன (௧௩௪)

---

a. தேம்பாவணி புரோகிதப்படலம் 40.
b. லூக்கா IV. 40.
c. மத்தேயு VIII. 28-34.
d. மத்தேயு IX. 33-34.
e. மத்தேயு XIII. 1 2-3.
f. ௸ XI. 20—24.
g. ௸ XII. 14-15 லூக்கா IV. 29. 30.
h. ௸ XIV. 19-20-21.
௸ XV. 36-37-38.
i. ௸ XXI. 6—9.

a. மாகாயத்தின் பாலோரற் புதங்காட்டக்கையி
லாகாமல் வேற்றூர்க் ககலுதல்பேய்—கூகாவென் (௱௩௫)

b. ஆலயத்தின்பால் வணிகரங்கலாய்க்கச் சவுக்கி
னாலவரைமாட்டியடிப்பதுபேய்—காலமலா (௱௩௬)

c. காளிற்பழமொன்று நல்காமைச்சத்திமரர்
தூளிபட்டு வேவச்சபிவதுபேய்—சோளிலகப் (௱௩௭)

d. பட்டுப்பரதவித்துப் பல்லொழியப் பூசைதின்று
குட்டுப்பட்டுத்துப்புங்கொள்ளுதல்பேய்—கிட்டிவந்து (௱௩௮)

e. ராச சமூகத்தினிலு நல்லோர்வல்லோர் முன்னு
மாசகலப் பேசாதடங்குதல்பேய்—நேசமுடன் (௱௩௯)

f. சேர்ந்தசனமெல்லாஞ் சிலுவைதனிலேயறையத்
தேர்ந்தொருமித்தோதத்திகைப்பதுபேய்—சேர்ந்தபலர்

g. வாராலடித்தும் வலக்கையினிற் கோல் கொடுத்துஞ்
சேராதமுண்முடியைச் சேர்த்தணிந்தும்—நேரா (௱௪௧)

h. யடிப்பித்த நிந்தித்தருவருக்குங்காடி
குடிப்பித்துங்கோவென்றரற்றித்—துடிப்படையக் (௱௪௨)

a. மத்தேயு XVI. 1—4.
மாற்கு VIII. 10—13.
b. யோவான் II. 14-15.
c. மத்தேயு XXI. 18—20.
மாற்கு XI. 12-13-14.
d. மத்தேயு XXVI. 67—68.
e. லூக்கா XXIII. 8—9. மாற்கு XV. 4—5.
f. மத்தேயு XXVII. 21—23.
g. யோவான் XIX. 2-3.
மத்தே XXVII. 29.
h. மத்தே XXVII. 34-48-49.

a. காலாணி மாராணி கையாணி யாச்சிலுவை
மேலாணிதைத்துவிருவித்தும்—பாலான (௩௪௩)

b. கள்ளர்களு நிந்திக்கக் கண்டவருநிந்திக்க
வெள்ளனுறும் வன்கழுவிலேறுதல்பே—யுள்ளபடி (௩௪௪)

c. யோவென்றரற்றியுயிர்க் கழுவிலேயிருந்து
சாவென்ற வேதனையைச்சாருதல்பே—யாவா (௩௪௫)

d. விரோதத்தார் செய்த புண்ணை மேன்மிசைக்காட்டிப்
பிரேதக்குழியிற் பிதற்றுதல்பேய்—குரோதந் (௩௪௬)

தகாதவிதமாமரித்தோன்றனே பேய்சாவி
லகாலமரணமடைவதுபே—யகாலத்தின் (௩௪௭)

மண்பால்வலு விலுயிர்மாண்டவரே மாண்டபின்பு
பெண்பாலரார்தம்மைப் பிடிக்கும்பேய்—கண்காண (௩௪௮)

e. வாவியாயந்தாமாயாங்காங்கலைந்தாலும்
பாவியர்கண்காணப்படுவது பேய்—பாவிகட்குக் (௩௪௯)

f. கால்காட்டிக் கைகாட்டிக் கண்கண் முகங்காட்டி
மேல்காட்டி நின்று விளம்புதல்பேய்—மால்காட்டும் (௩௫௦)

g. வெங்கடரெட்டி திருவேங்கடம் போய் மீண்டேந்த
சங்கடம் போனின்றுதவிப்பதுபேய்—இங்கு (௩௫௧)

---

a. லூக் XXIII. 33.

b. மத்தேயு XXVII. 39—45.

c. மத்தேயு XXVII. 46-50.

d. தேம்பாவணி உத்தாணப்படலம் 41—50.

e. மத்தேயு XXVIII. 16-17.

f. லூக் XXIV. 36—40.

g. கதாசிந்தாமணி வேடிக்கைக்கதை, உ௬.

a, விபரீதத்தோற்றம் விளைப்பதுபேய்தேனோ
டபவாதமீனு மருந்துதல்பேய்—விபரீத (௫௫௨)

மல்லவே இந்நாட் டனுபவமீதாகையினாற்
சொல்லவேவேண்டாதுதோன் றுங்கா—ணில்லிடத்து (௫௫௩)

நித்த நித்தம் பேயோட்ட நீண்முடியைக்கொய்தாணி
தைத்திகழ்ந்து காடிநீர்தாகக்குத்—துய்த்திடுதல் (௫௫௪)

நூதனமொன்றன்றே நுவலிற்பலகோடி
சாதனங்கள் காட்டச் சலியேமா—லாதலினிப் (௫௫௫)

பேய்க்கதைபெல்லாம்மூடிப் பேய்பிறிதென்றோலமிட்டால்
வாய்க்கொழுப்புன்மேலே வடியாதே—நாய்க்கொழுப்பாற் ()

புல்லருந்திக்கக்குவதே போற்றேவைப்பேயென்றுன்
சொல்லருந்திக்கக்கித் துயருழந்தாய்—நல்லது நீ (௫௫௭)

. நிரைய விலக்கணத்தாறுமாறு.

சாற்று நிரயத்தின் றன்மையென்னே யொன்றன்றி
வேற்று நிரயமிலை பென்பாய்—தோற்றுகின்ற (௫௫௮)

b. வந்நரகம் பூமியிலோ ராழக்குழியென்பா
எந்நேரமுந் தீயெரியுமென்பாய்—துன்னிவெகு (௫௫௯)

c. வேதனைகள் செய்யுமென்பாய் வேதாளம் பாவிகளை
வாதனையேசெய்து வருத்துமென்பாய்—தீதுடைய (௫௬௦)

d. கோரமிருகங்களங்கு கூடுமென்பாய் இன்னுவர்நா
வாரத்தவளை பாம்பாதியென்பாய்—நேரே (௫௬௧)

---

a. லூக் XXIV. 41—43.

b. தேம்பாவணி-வாமனுட்சிப்படலம் 79—86.

c. தேம்பாவணி வாமனுட்சிப்படலம் 81.

d. ஷை 83—95.

நிரையமது பூமியின்க ணிற்பதுவேலிந்தத்
தரையவர்கண் காணுமற்றங்க—வரிதாம (கசுஉ)

மலையுமுருக்குகின்ற வன்னியதிலுண்டேல்
நிலைகுலையாமற் பூமி நில்லா—துலைவெய்துஞ் (கசுங)

சிங்கங்கரடிபுலி சேருமெனிலவ்வுயிரை
யங்குச்சுடாமே யனல்குளிர்ந்து—தங்குகிலா (கசுச)

மண்ணை பலரை வருத்துமெனில் மண்ணையல
புண்ணியராப்போகம் பொருந்தலுறுந்—துண்ணெனவே

வேருநெருப்பினிடை வித்யாசமேவாதே
ஏகமாய்ப் பாவமிராததனுல்—ஆகுலஞ்சேர் (கசுசு)

பாவம்பகுப்பற்றுப் பண்ணினருக்கெல்லையற்று
மேவவரு மிவ்வாறு மெய்தணந்து—போவதனுல் (கசுஎ)

நிரைய நிரைய மென்று நீயழுதவெல்லாம்
விரையமாய்ப்போயின * பொய்மோக்கம்—வரைவானேன்

‡. ஏக நிரயத்து மெய்தினுனென்றுன்னூல்
பேசுதலால் வெந்நிரயம் பெற்றவனும்—னேசுவே (கசுஅ)

மற்றயருக்கோர்காலும் வாராதுவந்ததெனிற்
கற்றவர்களோர்போதுங் கைக்கொள்ளார்—மற்றுன்னூ

கூலித்தொழிலாளர் குருக்களாகாரெனல்.

143-144

லையந்திரிபா யறிதலினு லாழிகுழித்
துய்யறியார்தஞ்செய்கை யொக்குமென்று—பைய (கஎக)

---

*தேம்பாவணி வாமனுட்சிப்படலம் 71
‡ பிள்ளைத்தூது 216 ன் குறிப்பு.
தேம்பாவணி உத்தானப்படலம் 26-39.

உவமானத்தாற்காட்ட லுற்றுயதனு
லவமானந்தானே யடைந்தாய்—நவமாம் (௯௭௨)

பெரியார் சிறியார்கள் பேதையர் பெண்பாலா
ருரியாருன் னூலோதற் கென்றுந்—தெரியும் (௯௭௩)

படியெளிய செந்நடையின் பாலதென்றுங்கூற
லடியோடறுந்ததே யந்தோ—படிமேற் (௯௭௪)

பிறந்தானிருந்தான் பிதற்றினுனிற்றி
லிறந்தானல்லான் பொல்லானென்ன—வறிந்துணர (௯௭௫)

வையந்திரிபோடறியாமை யெய்துமதோ
வையத்தை யேமாற்றும் வாசகமோ—பையவே (௯௭௬)

கள்ளன்வழி பிறர்க்குக் காட்டுவான் மேட்டேனே
பள்ளமென்றவார்த்தைப் படியாச்சே—யுள்ளதுவாம் (௯௭௭)

மெய்ப்பொருளை யெள்ளிவிலக்கிவிட்டு வேறுபடும்
பொய்ப்பொருளையுள்ளதுபோற் போற்றலுற்றுய்-கைப்படநற்

றமணியையேற்றணித றென்மரபாமென்றனு
மாமணிக்காயாழி புகமாட்டாரே—மாமணிக்கங் (௯௭௮)

காழிகுழிப்போரு மம்மணியைச் சாணையிடைக்
கேழடையத்தூயன செய்கிற்போரும்—வாழித் (௯௮௦)

திருவாபரணங்கள் செய்வோரும் வெவ்வே
றுருவாந்தொழிலாளருண்டே—மருவாந் (௯௮௧)

தொழிலறியாமாந்தர்கண்மேற் றேடமென்செல்வர்
வழிவருமே யெல்லாமணியு—மொளியுள்ள (௯௮௨)

நாமணியுங்கள்ளமணியு மவர்பாலுறுமேற்
றமணியீதென்று துணிந்துணர—வேமணியில் (௯௮௩)

வச்சிரத்தின் குசியினை வைத்துப்பார்ப்பார் மணிதான்
வெச்சொதெண்ணென்னும் விதம்பார்ப்பா—ரிச்சைவழி

சோதித்துப் பார்ப்பார் சுடர்பார்ப்பார் மற்றதையுஞ்
சேதித்துப்பார்ப்பார் திடம் பார்ப்பார், கோதிவற்றிற் (௩௮௫)

கண்டாரேலம்மணியைக் கள்ளமென்று தள்ளியதைக்
கொண்டுவருவோர்மேற் குறையுரைப்பார்—பண்டிதுபோ

லுன்னூலுஞ்சைவத்துயர் நூலுஞ்சோதித்து
நன்னூரான் சைவமென்று நாட்டிவிட்டேன்—பொய்நூலைக்

கள்ளமென்றுதள்ளி யக்காற் கள்ளமணிகொண்டு வந்தோர்
தெள்ளுணர்வோர் மேற்பழியுஞ் செப்புவரோ-கள்ளனுக்குக்

கூவென்றூர் தம்மீது கோபம்வருந்தன் மையொத்தே
யோவென்று வாய்ப்பிதற்றலுற்றனையாற்—றீவொன்று

மாழிகுளிப்போரென்போ லாரென்றகங்கரித்துப் *
பாழிலுழைத்துப் பரதவித்தா—யாழிபுகுஞ் (௩௯௦)

* கூலித்தொழிலாளர் கொண்டு விற்போர் போன்றகுரு
வேலைப்பகிடிக்கை மேவாதே—காலம்போற் (௩௯௧)

பார்த்திருக்கவைத்த பரமகுருவைய பரவை
வார்த்தையில்லைத் தீண்டா மணமென்றுஞ்—சேர்த்துங்

குருட்டரிப்பனூர்க்குங் குபேரனென்றுபேரோ
கருப்பிரத மொத்தையோ சாட்டு—மருட்ட ரித்த (௩௯௩)

வாசானைப்போல்வாரோ வாறுறுகசுப்புறத்தே
பேசாதிருத்த வல்லாப்பேயென று—கூசா (௩௯௪)

துரைத்தார் பெரியோர் மற்றுன்னை த்தே கண்டாஞ்
சிரைத்தாற்றலை விதியோ தீரா— ...மூன்றன் (௩௯௫)

* ஒழிவிலொடுக்கம்.

சற்குருமார் சோற்றுக்குஞ் சம்பளத்துக்கும் மலைந்து
நிற்கையினாலவ்வுவமை நேர்ந்தனகொல்—பற்கெஞ்சி

நீகுருபாற் கேட்பதுவு நிற்குன் குருவுணர்த்த
லாகும் பொருளு மகத்தடக்கி—வேகமொடு (௩௯௭)

‡ குட்டித்திரட் கரடியாறெழுகக்கோன் குதித்துக்
கட்டிப்புதைந்த கதை யாகுந்—துட்டமலப் (௩௯௮)

பித்திலே மூத்தவர்கள் பெய்ப்பிதற்றும் பேதையர்க்குப்
புத்திபோற்காட்டும் பொருளென்றார்—கத்தித் (௩௯௯)

### பைபிளின் தவறு பதிதர்மேலேற்றெனல்.

145
தெருத்தெருவா யுங்கண்மறை நீட்டிப்பதிதர்
தாவுண்டு கக்கிச் சலித்தே—யருவருத்து (௪00)

146-147
வெந்தவற்றைச் சோறென்று மிக்கருந்திப் பின்னுணர்ந்து
நொந்துகக்கி னேனுவலு நொய்யவுரை—வெந்திலாச் (௪0௧)

சோற்றின் பாலன்றிச் சுடுபேசிக்கா வுண்டவன்மேற்
சாற்றுவரோ நன்று நீ சாற்றினாய்—தூற்றுவது (௪0௨)

பிள்ளைக் குரியதொழில் பேருணர்வீர் நீயிர்மேற்
கொள்ளறக வன்றென்று கூறினைகொ—லுள்ள (௪0௩)

திருக்கதன்பால் யாமெடுத்துச் செப்பினலச்சோ
சுறுக்கென்றுன் னெஞ்சேன் சுடுமோ—தருக்கிப் (௪0௪)

145-405-448.
பதிதர்தம தச்சிற் பதித்த புத்தகத்தை
யதிவிதமாத் தூஷித்தா யன்றிக்—கதியதுவே (௪0௫)

---

‡ ஒழிவிலொடுக்கம்.

யாமென்றுன் பீற லடைக்க வடைக்கலம
தாமென்றாங் காங்கே யணிந்துகொண்டாய்—காமந்த (௬0௬)

வேட்டின்மேற் காட்டும்வழூ வெல்லாம் வாரித் தலைமேற்
போட்டு விடைசொல்லப் புறப்பட்டாய்—கூட்டம் (௬0௭)

பெருத்த திராவிடமென நீ பேசுமிடத்தன்றோர்
மருத்திராவிடை யுள்ளடக்கி வைத்தாய்—பொருத்தமிலா (௬0௮)

வோருரையுங்காட்டிலா யுன்றே வவர்தேவாச்
சேருதலி னாற்பொய்யைச் செப்புதற்கு—நேருஙிலார் (௬0௯)

காதலனைத் தூடிக்குங் காதலிமார் யாண்டுமிலை
யாதலிற்றந் தேவநிந்தைக் கார்துணிவார்—மீதுவரு (௬௧0)

மாறுகோளுள்ளதெனின் மற்றது வாஸ்தவ்வியமாம்
மாறுகோளென்றே மதித்தடங்காய்—கூறுகின்ற (௬௧௧)

சான்றினர்க ளொவ்வாத சான்றுரைக்கி லங்கவர்பொய்ச்
சான்றினர்க ளாயொருங்கே தள்ளுண்பார்—நான்றுகொளா

தவ்விருவோர்க் குள்ளொருவ னாற்றல் சொலி மற்றவனைத்
தெவ்வனெனவே பகைத்துச் சீறியே—வைவதுபோற்(௬௧௩)

கெட்டா னவன் குடியன் கேட னெனக்குங் கொஞ்சம்
விட்டானலமென்ற விந்தையையுந்—துட்ட (௬௧௪)

வகந்தை பர கிந்தைபொரு ளாசையுளான்போல
விகந்தவெனக்குஞ் சமனா யீத—றகுந்ததோ (௬௧௫)

வென்பதையு மொத்தவரை யேன்பதித ரென்றிகழ்ந்தாய்
நின்பதிதத் தன்மை நிலை நின்றதுவே—மன்பதைதா (௬௧௬)

மெச்சமைய மெய்ச்சமைய மென்றடுத்தாலும்முழுது
மச்சமையக் கொள்கைக் கடங்காது—துச்சமதா (௬௧௭)

இந்துமதக் கொள்கை சில வேசுமதக் கொள்கை சில
தந்தமதக் கொள்கை சில சார்த்தியே—தெந்தனமாப் (சகஅ)

பாம்புக்குத் தன்றலையும் பசர்மீனுக்கே வாலும்
வீம்புக்குக் காட்டி வெருட்டுவதா—லாம்பயனென் (சககூ)

ப்ாப்பு மார்க்சப்பெயரைப் பற்றிமொழிந் தாய்போறு
மீப்புகழ் கிள்ளைத்துதின் மேவியுள—யாப்பதன்கட் (சஉ0)
பிள்ளைத்தூது மறுப்புக்குத் தூலவாதமே
சால் புடைத்தெனல்.

போந்த விஞுக்கொள்ளுவோன் புந்திசொளு மாறுணர்த்தப்
போந்த விளுவென் றறியப் புந்தியிலாய்—காந்தி நீ (சஉக)

செப்பும் பருப்பொருளே சேர்ந்தவழு வாம் விடையைச்
செப்பும் விழுப்பொருளாற் சேதிக்கி—லொப்பா (சஉஉ)

வழுக்கை யழுக்காலே யகற்றுதல்போ னீசொல்
விழுக்கை இழுக்கா லகற்றவெண்ணி—வழுக்களையத் (சஉ௩)

தூலவுத்திகொண்டே தொடங்கினும் மாற்றுதற்குப்
பாலப்பருவத்தின் பண்பினுக்குரு—சாலுமாற் (சஉச)
அப்பு முதற்படைப் பன்றெனல்.

சாமியசைவாடச் சலம் வரும் பின்னே யொளியும்
பூமியொடுவானும் பொருந்தவரு—மீமிசையே (சஉரு)

சாமியசைவாடச் சலமிருந்தாலச்சலந்தான்
பூமியிருந்தல்லாற் பொருந்துமோ—பூமியதை (சஉசு)

முன்னே யுண்டாக்கி முடித்திருந்தாற் றேவனதைப்
பின்னே யுண்டாக்கியதாப் பேசியதென்—னென்னே (சஉஎ)

யுரையென்றெழுந்த விஞவுள்ளடங்கச்செவ்வே
வரையவறியாது வரைந்த—புரையுள நீ (சஉஅ)
152-153

இந்துமதச் சாத்திரங்க ளெல்லா முணர்ந்தவன்போற்
றந்து சில வாசகமுன் சார்பென்றாய்—பிந்தி (௪௨௯)
162—169

160
யனவத்தைத்தோட மதி லாமென்றுஞ் சாற்றி
மனப்பால் குடித்து மகிழ்ந்தாய்—கனவினிடைப் (௪௩0)

154
பேசுவார்போலப் பெருமடமை பேசட்டு
மூசு முழுமதியர் மொழியட்டுஞ்—சீசியென (௪௩௧)
175

நிந்தை மொழிபேசி யெதிர் நின்று யுதாரணமுன்
சிந்தை மகிழும் வகை செப்பினவோ—வந்தவற்று (௪௩௨)

ளெம்மர் லங்கீகரிப்ப தெல்லா மல சிலவா
மம்மாற்றத் துட்பொரு ளாராயுங்கா—லிம்மாப் (௪௩௩)

பிரபஞ்சத் தோற்றமது பேசியவையன்றுந்
தருதத்துவத் தோற்றஞ் சாற்றும்—வரன்முறையா (௪௩௪)

லப்புமுதலே யலவனல்கா லாகாய
மொப்புமுதல் வேறுமென் றோதினவா—லிப்புவனங் (௪௩௫)

கற்பங்கடோறுங் கனல் நீ[illegible]யொடுங்கி
யுற்பவிக்கு மம்முறையென் [illegible]றாது கற்பமொன்றுங் (௪௩௬)

காணுத நீ சமம்போற் காட்டியந்த வாக்கியத்தைப்
பூணுகப் பூணல் புதுமையதே—காணும (௪௩௭)

* லப்புமுதலென்றாய் பின்னல்லவென்றாய் பூமியென்றாய்
பிற்படைப்போ பின்காணப் பெற்றதென்றாய்-தப்புகைக்குக்
176

* பிள்ளைத்தூது 171 குறிப்பு.

காப்பிய வ்யாக்யானங்கள் காண்கவென்றாய் பித்தனென்
வாய்ப்பிதற்றலுன்றன் மரபாமே—பேய்ப்பிதற்றாய் (௪௩௯)

## மேகாதி பதார்த்த விசாரம்.

171—172
முன்னீர்தொன்னீரா மொழிக்கருத்தஞ் செய்ததுவு
நன்னீர்மை யாற்பழமை நாட்டாதோ—கம் நீர்மேற் (௪௪0)

174
கொண்டதனுன் மேகமென்று கூறினாய் வேலைகம் நீழ்க்
கொண்டதனாற் கீகமென்றுங் கூறுதிமே—கந்தமிழின் (௪௪௧)

சொல்லோவட சொல்லோ சோதித்துச்சொல்லுதியிச்
சொல்லறியா நீதானோ தூதுரைக்க—வல்லாயுன் (௪௪௨)

மித்திரனுயுன் முடிபை வெட்டவெளியா யுரைக்குந்
தத்துவவிவேசினியைத் தான்பிடித்தாய்—மெத்தவதி (௪௪௩)

வேகமொடுநீண்மரங்கண் மேற்பாய் வலிமுகமாம்
யூகமதுபல்கா லுழிதரினு—மேகுமதன் (௪௪௪)

பிள்ளைவிடாது பிடிப்பதியூகப் பிடியாம்
பிள்ளையெனவப் பெயர் நீ பெற்றதனாற்—றள்ளாது (௪௪௫)

பற்றினுயம்மொழியைப் பற்றியநீ பற்றாரை
யெற்றினுக்கியூக மெனவிசைத்தா—யற்றதுவா (௪௪௬)
174

மேகமொருபதமாய் மேவும்வடமொழிக்கண்
மோரகமெனப்போந்த மொழிபோலு—மாகருஷ (௪௪௭)

ணத்தாலேபூமிவிட்டு நாரம்விழாதென்ற புதுத்
தத்துவநூலோர் மொழியுந் தள்ளினாய்—பித்தாக (௪௪௮)

நீர்படைத்தான் முன்பந்தநீரிலசைவாடி யுற்றுண்
பார்படைத்தான்பின்பென்னும் பாழ்த்தமொழி—சீர்படையா

### இருளேன் பொருளாகாதெனல்.

தான்றவொளி பின்படைத்தாலாரிருண்முன்பேயுளதா
யேன்றவிருளும் படைப்புளெய்தாமை—தோன்றவிருட்
•
கண்ணுறைந்தவேகோவா காரிருளும்பேரொளியும்
பண்ணினனென்றல் பழுதென்று—லொண்ணுமெனக்

காட்டுவதுன்மேலே கட்டமையா நிற்கவிருள்
கூட்டுபொருளாகில்விடை கூறவென்று—மீட்டும் (௪௫௨)

180
வினவெதிர்நீகேட்கவந்த விர்தையதிவிர்தை
* யுனதுமதநூலுரையு மோரா—யெனதுமத (௪௫௩)

மவ்விருளுமோர் பொருளேயாமென்று கூறலஃ
தெவ்வாற்றுனுமோ வெனிலுரைப்பாங்—குவ்வினிடை

நீர்மிக்கபோது நெருப்பவிதலானெருப்பை
யோர்பொருளன்றென்றேயுரைப்பாயோ—பார்வையுறு

கண்ணுஞ்சுடரவிந்தாற் காணுமை கொண்டுபொரு
ளன்ஹுவதன்றென்றே நவில்வாயோ—விண்ணிரவி (௪௫௬)

வந்தவுடன் வான்மீன் மறையுமறைந்திடினு
மந்தமீனும் பொருளன்றாய்விடுமோ—விந்திரவி (௪௫௭)

தேசடைந்தபோது சிறிதொழிந்து நின்றதன்றி
மாசடைந்தவில் பொருளோ வல்லிருடா—னுசி (௪௫௮)

---

* 1 மோசே I. 2. மெய்மறை உத்தியானம் 3 காண்டம் 4 அதிகாரம் 2 ம் பிரகரணத்தின் சுற்றுவாக்கியம்.

றெழில்பண்பளவுருவு தோற்ற மிவற்றாலே
மொழிபொருளென்றேயுரைப்பர் முன்னோர்—விழியெதிரே

லையாயிகமனந்த நாட்டி கீ நாவெடுத்தா
லையப்புடைத்தே நசுக்குவங்கா—ணையமிதற் (சகூ0)

181
காயுறுமோவீராண் டவதியேனன்றெனற்குன்
னுயுள்வரையிலவதிதந்தா—நீயுரையாய் (சகூக)

அற்றேலுமதுகொள்கை யல்லவற்றையுள்ளடங்கச்
சொற்றதேயென்பாயேற் செல்லுதுங்கேள்—கற்றபேர்

கல்லாருட்கொண்ட கருத்தோர்ந்து பாகம்வரச்
சல்லாபஞ்செய்தல் சகசங்காண்—நில்லாய்பின் (சகூங)

185
பல்பூண்டைத்தேர்ந்து படைக்கவென்று பார்தருமேற்
றெல்விருகமாதி பலதோற்றமெலா—நல்கும்வினை (சகூச)

பூவினுக்கேதந்து புரிவித்திடாதுபன்று
ளோவருந்திச் செய்வானுனதிறைவன்—நீவள் (சகூரு)

ஒளியின்சிருட்டி நாளாகாதெனல்.

ளொளியுமிருளு முலகத்தார்க்கன்றி
வெளியான வித்தகற்கேன் வேண்டு—மொளியதனைச் (சகூசு)
189
190
சிட்டித்ததாலே தினமூன்றடங்கிவிடு
மொட்டியதன் றுற்பரிய முய்த்துணரிற்-இட்டியொளி (சகூஎ)
192
நின்றபொழுதே பகலா நில்லாமன் மாறியது
குன்றியதே மாலையென்னக் கூடுமென்றாய்-நன்றுசொன்னாய்

பித்தர்களுங்கேட்கிற் பெருநகைசெய் கிற்குமுரை
எத்தருரையுன்போல்வாற் கேற்றவுரை—புத்தகத்திற் (சகூஅ)

* கால மதுசாயுங் காலம் விடிதலுறுங
காலமதுவா யொருநாட் கண்டமதன—மேலிரவி (சஎ0)

தோற்ற மொடுசாயுந் தொழிற்குறிப்பாற்கூறுதனீ
ஏற்றும் பொருளுக் கிடந்தருமோ—தோற்றுமொளி (சஎக)

நிற்பானேன் சற்றங்கு நில்லாமற்போவானேன்
பிற்பாடு பொய்ச்சான்று பேசுதற்கோ—வற்பாம் (சஎஉ)

ஒளியிருளை வேண்டாத வுன்றேவனுளைக்
களிமகிழ்வால் வேண்டுவதென் கண்டோ—வொளிசெயுநாள்

சூரியனுஞ் சந்திரனுந் தோன்றியபின் றன்னுருவம்
மாறிய சா வீது மடமையே—பீறியதோர் (சஎச)

கந்தலதைமூடக் கலப்புழுகே கொட்டுகினுங்
கந்தலதுக ல கண்டடங்கா—யந்தந்தோ (சஎரு)

## தேவரூப பிரஸ்னோத்தர திரஸ்காரம்.

மானிடரின் சாயலது வாய்ந்துளனேற் சாயலுக்குத்
தானிடமாம் ரூபம் வந்து சாராதோ—வேனவனைத் (சஎசு)

தோற்று வருபியெனச் சொல்லுவதென்றுற்றகடாக்
கேற்ற விடைதருதற் கேலாமற்—றேற்றியவா (சஎஎ)

194
திட்டாந்தம் போற்பலவுஞ் செப்பியருவுருவும்
பட்டிருமை யாமூன்றும் பாரென்றும்—முட்டேற்றுத் (சஎஅ)

201—202
தேவுதயைநீதி திகழ் நட்பான் மூன்றுவன்
மூவரலன் ஒன்றாய் முடிவனென்று—மாவதனுற் (சஎகூ)

---

* 1. மோசே I. 5-8-13-19-23-31.

204
ரூற்ருவ ரூபியெனச் சொல்லுவதே னென்றகடா
நீற்ரூப் பறந்ததென்று நின்றழுதாய்—ஏற்றுக் (சஅ௦)

கடம்பூர் தனக்குவழி காட்டென்று கேட்டாற்
கிடம்பூணி யென்ருவின் கன்றென்—றுடங்குரைத்தா (சஅக)

யருவனெனன் முற்று மசத்திய மென்பார்க்கு
குருவனெனத் திட்டாந்த மோதித்—திரிவிதம்பின் (சஅ௨)

வேறுண்டெனவுரைத்து வேற்றுவழி காட்டியக்கால்
நீறுண்ட தாமோமுன் னோர்ந்தவினு—மீறுங் (சஅ௩)

கடாவினுக்கிங் கேற்றவிடை காட்டாதொழிந்தாற்
கடாவிவிடு மாப்புக்கடாவே—யடாத (சஅச)
55

196
திரிதத்துவ மென்ருய் சிந்திப்பாஞ்சற்றே
வெரிதத்துவத்துணர்வின் மேலோய்—விரியும் (சஅரு)

திரித்வ ரசாபாசம்.

மனம்புத்திசித்த மகங்கார நான்காம்
மனநினைவோபல்லபலவாகு—மனமுன்ன (சஅசு)

முண்பது காழியுடைப்பது நான்குமுழ
மெண்பது கோடிநினைந்தெண்ணுவவென்—றெண்பெறவே

196
கூறியதாற்புத்திமனங் கூர்நினைவே முன்றென்னக்
கூறியது பல்லுருவங்கொண்டழியும்—வேறிவையப் (சஅஎ)

197—201.
மாறயிர்வெண்ணெய் நெருப்புப் பட்டு மடிப்புப்பூவும்
போறிரித்வமென்று புலம்பினுய்—பாறயிர்தான் (சஅஅ)

ரூப சகந்தமன்றி நோன்பரி சமாதிகளால்
வ்யாபகமாமிக்க குணமேவியே—நீபகர்ந்த (௪௯0)

முக்குணந்தான் றப்பி முறுகினான் கைந்தாறு
தொக்க குணங்க டொடருமா—லக்கணமே (௪௯௧)

திரியேக தேவன் சதுரேக தேவன்
புரியைந்தோ டாறேக தேவன்—விரிதருங்காண் (௪௯௨)

பட்டமெடிப் பொன்றுன்கைப்பட்டு மடிக்கப்பட்லா [றன்
விட்டம்போன் மூன்றென்று மென்றிடலாந்—தொட்டவுன்

றேவன் றனது திரித்துவமே மானிடர்பா
லாவதென லொவ்வாமை யாயினபார்—தேவன் (௪௯௪)

றயைநீதி நட்பதனுற் முன்மூன்று வாறே
தயைநீதிகள் குணிபார்ச் சார்தற்—கியைகுணங்கா (௪௯௫)

ணன்னவையே கோவாவோ டாவிசுத னுமதனுற்
பின்னமலவென்றெடுத்துப்பேசினுய்—சொன்னகுணம்

வேறு பிரிந்து வெளிப்படுமோ வேற்றார்க
டோறு மறுபெயருஞ் சூடுமோ—வீறுவரில் (௪௯௭)

* ஏமாறி யேலீஇ ஏலியெனக் கூப்பிடுமோ
லாமாசபக்தானியென னையுமோ—தாமாறித் (௪௯௮)

தந்தை சுதனென்னத் தனிக்குமோ வாவியொன்று
‡ வந்து புறுப்போலிறங்க வாய்க்குமோ—புந்தியிலா (௪௯௯)

யேகனென்று நீயுரைக்கு மேகோவா வொன்றுபுறுக்
காகவுயி ரொன்றேசுக் கத்தனுமொன்—றுகவிவ (௫00)

ரெத்தனைபேர் சொல்லுதிநீ யென்றென் விளுவீந்தாற்
பித்தனைய பிள்ளைப் பிழையாலே—யத்தனையுஞ் (௫0௧)

* மத்தேயு XXVII-46. மாற்கு XV 34. ‡லூக் III. 22.

சங்கலித வெண்முறைமை தப்பி விவகலித
வங்கியில்லைத் தொன்றென் றளித்திவிடை—நன்கிதுவே

சிருட்டியின்முன் தேவநிலைமையாதி குற்சிதம்.

தோற்றமெலாஞ் செய்யத் தொடங்குமுனே தேவனவ
னுற்றவுந்தன் னிற்றேனேயாயிருந்தால்—வேற்றுலகஞ் (ரு0௫)
206.

செய்வானேன் மானுடரைச் செய்வானேன் பைசாசை [று
லைவானேன் வானவரை வாழ்த்துவதேன்—செய்கையொன்

மில்லா தொருதா னிருக்கப் பயந்தானோ
வல்லாததைப் படைக்க வார்கேட்டா—ரெல்லாந் (ரு0ரு)

தன்பயனுக்கோ பிறர்க டம்பயனுக்கோ படைத்தான்
வன்பா மவப்பயனே வாய்த்துவருந்—தன்பால் (ரு0௬)

விளையாட்டாவந்து விளையுமெனின் மேலும்
விளையாட்டாத்திதேன் விளையா—திளையார் (ரு0எ)

பயனில்விளையாட்டுப் பயிலுதல்போற்றேவன்
பயனில்விளையாட்டோ பயின்றான்—குயமதியாய் (ரு0அ)

தன்சாயல்போனரைத் தந்து நரர்கண்ணிலரோற்
கொன்சாருந்தேவன் குருடனோ—வென்சாற்று (ரு0௯)

கென்றவிஞ்ஞாதியர்கண் ணில்லாரெனல்பொய்மை
யென்றதன்றித்தேவி னிகழ்ச்சிமொழி—யன்றதைநீ (ருக0)

சம்மதித்துவேறுபொருள் சாற்றியும்வீணேவலிந்திங்
கெம்மைமிகநிந்தித்த தெற்றினுக்கோ—வம்மம்ம (ருகக)
211.

மூக்கைச்சேர்ரிந்தக்கான் மூகைக்குக்கோபம்வருஞ்
சாக்கைப்போற்பேசத் தலைப்பட்டாய்—வாக்கிடையே (ருகஉ)

தன்னைவணங்கச்சமைத் தானென்மாக்கள்பல
ரென்னைவணங்காதிகழ்ந் துரைத்தல்—தின்னுதற்குப் (௫௧௩)

பக்கிமிருகத்தையுண்டு பண்ணினால்யாமவற்றின்
குக்கிக்கிரையாதல் கூடுமோ—மிக்குதவி (௫௧௪)

நல்லதுசெய்தோம் நரனெலும்பிற்பெண்படைத்தா
லல்லதுவுஞ்செய்த லழகேயோ—நல்லதென (௫௧௫)

வொன்றைநினைக்கிலது வழிந்திட்டொன்றாயிற்
றென்றல்கடவுட் கியல்பாமோ—வென்றபல (௫௧௬)

வேதுக்களோடேயெழுந்த வினாவிற்குவிடை
சாதிக்கத்தக்க சமர்த்தின்றி—மாதுக்கங் (௫௧௭)

220—225.
கொண்டுசிலபொய்க்கதையைக் கொண்டெமைத்தூடித்துவிட்
டாற்,பண்டெழுந்தகேள்வியெலாம் பாழ்படுமோ—வண்டா

## புனர்ஜனன வாதபங்கம்.

230.
ம்றுசனனமென்று மயங்கினீரந்தோ
விறுசனனமெவ்வா றியங்கு—முறுசனன (௫௧௯)

231. 232-233.
முன்னுணர்வுபோயதெனை முற்றுந்துயருழந்த
வனைமறதியடையாதே—னென்னையெனக் (௫௨௦)

கேள்விசிலகேட்டுவிட்டுக் கீழ்மையைமேலோரடைதல்
தாழ்வல்லச்சோதனைசெய் தன்மையென்றும்—மீளவலை
241.

238—239.
மர்தாபிதாக்களான் மன்னுதங்கிரியையினாற்
கோதானதில்லாக் குணத்தினாற்—போதுமென்று (௫௨௨)

மொருவாய்மையில்லாம லொவ்வாமையோதி
யிருவாய்மையெய்த விசைத்தும்—மருவாரு (ருஉங)

மூர்க்கரைமூர்க்கர் முகப்பர்முதுகாட்டிற்
காக்கையுகக்கும் பிணமென்ற—வாக்கிசையத் (ருஉச)

264.
* திருவள்ளுவர்பேர் திருமடவெளிப்பட்ட
வொருவள்ளுவன் றேம்புரையும்—பெரிய (ருஉரு)

266.
சிவவாக்கியப்பேர் திருடிவெளிப்பட்ட
பவவாசகனழுது பன்னும்—நவவாக்குந் (ருஉசா)

தோற்றிநல்லோர்வார்த்தையெனச் சூதரைராதார்மயங்க
வேற்றிப்ரபலவாக்யம்போலப்—போற்றிநீ (ருஉஎ)

மண்குதிரையானீர் வழிக்கொண்டாய்நன்றுநன்று
கண்குறிக்கிங்கேதோ கலக்குறிதான்—நண்குறித்த (ருஉஅ)

மாதாபிதாக்கள்வறுமை செல்வமைந்தரிடைப்
போதாமையாலும் பொருந்தாத—நீதாங் (ருஉகூ)

---

* ஞானவெட்டியான். இவன் கிறிஸ்து மகம்மதுசமயங்கள் இத்தேயத்திற் பரவியபின்னர்த்தோன்றிய ஒருசாமானியனாகிய வெட்டியான். சை 469 " அல்லாகுதாவெனவுமைந்துசரம்வைத்துப்பணிர்,தில்லிஃலாவெனத்துதித்து யினிமுடிசாய்ந்தேதொழுவார், சொல்லாருபதேசிகுதர்களும் சூதுவைத்து, வெல்வார்ஞானப்ரசங்கம்வெகுகிறிஸ்தவர்மனமே." என்பதனாலறிக, அன்றியுந்தெய்வப்புலமைத்திருவள்ளுவநாயனார்காலத்திற்கு நெடுநாட் பின்னருதித்த கம்பர், அதிவீரபாண்டியர், முதலியோரை சை 465 " ஆய்ந்துகவிபாடிவிட்டான்கம்பன்வம்பன் அதிதாராமாயணத்திலனேகம் பொய்தான், சாயாமலதிவீரபாண்டியன்சொல்லும் தமயந்திசரித்திரைநைடதமுஞ்சொன்னார்." என்றுகுறித்திருக்கிறது. இவையன்றி அதிலுள்ள குளறுபடைகள்பலவற்றாலும் அருவருக்குந்தமிழ்

குணமுட்டைமை மைத்ரிடைக் கூடுதலினானுங்
குணமவரால் வந்ததெனல் கூடா—துணருங்கால் (௫௦)

நல்லகிரியை நலநல்காமற் றீயதரு
மல்ல கிரியைநல மாக்குவிக்கு—மில்லதுமா (௫௧)

---

நடையாலும், அதுதெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் திருவாக்கன்றெனக் கரதலாமலகமா யாவருந் தெளியக்கிடந்தும், அவ்வுண்மைக்கு விரோதமாக அதில் தானே திருவள்ளுவரென்றும், 1297 " கும்பமுனியனுக்கிரகவுபதேசத்தால் குருவருளால் மதனகாமேசரத்தைச்சொன்னேன், எம்பிரான்கிருபையெனக்கெய்துங்கால மிப்படியான்பாடிபட்டே னெளியோர்க்காக, அம்புவியில்குறளடியேன் பாடும்நாளில் அனேகம்பேரெனையெதிர்த்துஉரைதான்கேட்க, வன்புலையர்க்கருளவில்லைப்பெரியோர்சேட்டு மனமகிழ்ந்து ஆண்டையென்னை வாழ்த்தினரே." என்று தன்னாற் குறட்பா பாடப்பட்டதென்றும், பொய்பேசுந் திருட்டுத்தனம் தோன்றத் திருவள்ளுவர் பேர் திருடி வெளிப்பட்டான்; என்றும்,

அவ்வாறே சிவவாக்கியம்-57-" அருக்கனோடுசோமனும்தருமப்புறத்தினும், நெருக்கியேறுதாரகைநெருங்குமோரகத்திலே, பரப்பிலாதவெளியிலேபரத்தைநாடியூடுபோ, யிருக்கவல்லவர்க்கலோ வினிப்பிறப்பதில்லையே." என்றும் 82 "வல்லவாசலொன்பதும்மருத்தடைத்தவாசலும், செல்லும்வாசலேர்ந்தும் செல்லவிம்மிநின்றதும், நல்லவாசலைத்திறந்துஞானவாசலூடுபோய், எல்லைவாசல்கண்டபின்னினிப்பிறப்பதில்லையே."என்றும்தெளிவாகக்கூறியவற்றிற்கு முற்றிலுமாறாக "கறந்தபால்முலைபுகாகடைந்தவெண்ணெய்மோர்புகா, துடைந்தசங்கினோசையுமுயிர்களுமுடல்புகா, வடிந்தவேரடியினிலுதிர்ந்தபூமரம்புகா, விறந்துபோனமானிடரினிப்பிறப்பதில்லையே." என்று போலிப்பாவைக்கற் பித்துப்புலம்புந்திருட்டுத்தோன் றச்சிவவாக்கியப்பேர் திருடிவெளிப்பட்டான் என்றும், கூறினும். இவைபோல்வன பலவுளவிரிவஞ்சிவிடுத்தாமென்க.

மாதவினாற் றங்கிரியை யால்வருதல்கூடாது
கோதற்ற நல்ல குணமேலைக்—காதலன்றி (௫௩௨)

யிம்மை யிடைக்காணா திதற்குநீ காட்டுரையே
செம்மையுறு சான்றாஞ் சிறுபிள்ளாய்—மெய்ம்மைப் (௫௩௩)

*பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்லா—மருமையுரை (௫௩௪)

அத்தாட்சி யைக்கிரியை யாலறியச் சொன்னதன்றிக்
கொத்தாட்சி யாயதையே கூறியதோ—மெத்தமெத்த (௫௩௫)

242.
வைததனையின்சொல்லாக் கொள்வானுங் கூழதனை
நெய்பெய்த சோறா நினைப்பானுங்—கைமிகுத்த (௫௩௬)

243.
கைப்பதனைக் கட்டியென் றுண்பானு மிம்மூவர்
மெய்ப்பொருளே கண்டுவாழ் வாரென்ற—வப்பொருட்டான்

றுன்பமுற்றபோது சுகம்போற் கருதிலந்தத்
துன்பவருத்த மிக்குத் தோற்றாமைக்—கென்பதென் (௫௩௮)

நன்றறிதி யுன்னெண்ண காட்டவந்த மேற்கோளன்
றென்றறிதி பாவத் திழிகுழவி—மன்ற (௫௩௯)

பிறக்குந் துயரோ பிறந்துலகில் வாழ்ந்துண்
டிறக்குந் துயரோமே லென்று—குறிக்குங்காற் (௫௪௦)

சாத்துயர்மே லென்பதலாற் றாய்பிள்ளை யைப்பெறுதன்
மீத்துயரென் றியாரே விளம்பினவர்—சாத்துயரோ (௫௪௧)

டொக்கப் பிறந்ததுய ருற்றிடலா லம்மறதி
புக்கதுள தென்றறிநீ புந்தியிலாய்—சொக்கியே (௫௪௨)

---

* பிள்ளைத்தூது 238. குறிப்பு.

நித்திரையிற்போன நினைவு பின்னும் வந்தடைத
லொத்ததுவே தாய்த்துயரமுய்த்துணர்தி—பித்தருக்கும்

மூப்படைந்தோருக்கு முழுமறதி வந்தடுத்தல்
யாப்பலவே கண்கண்ட தாகும்பொச்—சாப்படைந்து (௫௪௬)

தோற்றமுயிர்க் கில்லையென்று சொல்லியநீ மாறுக
* வேற்றுப்பொருள்கோள் விளம்புவதென்—சாற்றக்கேண்

மாக்கள்சிலர் செத்தபின்பு வானவ ராஞரொன்றும்
மோக்கமுறுசம்மனசின் மூர்க்கர்சிலர்—பேய்க்கதியைக்

கொண்டாரென்றுஞ் சற்றுங் கூசாது பேசுதலற்
பண்டோலங் காணப் படலாமே—பண்டொருகாற் (௫௪௭)

‡ ரேவணனநபுகன் றேறிவெளிப் பட்டதற்குன்
றேவனவன் மீது சீறியே—பாவ (௫௪௮)

விலங்குருவங்கொண்டு புல்லைமேய்ந்து திரியென்னக்
கலங்கியவ னவ்வாறு காணி—னலங்குலைந்து (௫௪௯)

புல்லருந்தி நின்றகதை போற்றிமுன் னூல்கொண்டோ
வில்லை மறுசனன மென்பதுநீ—நல்லைநல்லை (௫௰)

முன்னறிவு நின்றுளதேன் முசலமதியோய் புல்லைத்
தின்னறி வொன்றருங்கு வந்துசேராதே—பின்னையுநீ (௫௰௧)
புலாலருந்தலின்புந்தி.

257.
கொன்றா னருந்துவது குற்றமல வென்றுசொலி
யென்றூய்மைகொண்டோ வியம்பினாய்—நன்றாக்கா. (௫௰௨)

256.
நெஞ்சத்தாய் மற்றதற்குய்யாய மறைமிருதி
யுஞ்சொலு மென்றஞ்சா துரைத்துகந்தாய்—மிஞ்சவவை

* யோவான் III. 3—8

‡ தேம்பாவணிவேதக் கெழுமைப்படலம். 77-83.

யூனருந் தறீதென் றுறுதிப்பட வுரைக்கு
மூனருந்து மாசையுன் போலுள்ளோர்கட்—கூனருந்த

மெள்ளச்சிறிதே விதிவிலக்குக் கூறி முற்றுந்
தள்ளுவதே வேதத்தின் சம்மதங்காண்—பிள்ளைகளுக்(ருருரு)

கும்மருந்தைப்பின்ன ரொளித்தளைழக்குந் தாயுனைபோற்
செய்த பொதுமன்றநீ தேர்குவையோ—சைவமது (ருருசு)

சாருஞ் சிவத்தோடு சம்பந்தமென்ற பொருள்
சேரும் பதமாச் சிறந்தாலு—மாருயிரைக் (ருருஎ)

கொன்றருந் தாமைக் குலகங்கூறுங் கொல்லாவிரத
ரென்றறிந்தேசுத்த வியற்சைவந்—தொன்றுதொட்டுப்

புன்புலா லுண்பாரைப் போற்றுது தூற்றுமஃ
தின்புலா லுக்கோருரை தருமோ-பின்பதுவிட் (ருருகூ)

டீசன் புலாலுண்டா னென்றுயிறந்த பின்பு
* மேசுபுலா லுண்டதனை யெண்ணியதி—லாசைகொண்டு

மாமிசப் பித்தாலே மதிமறந்து கூறினையே
யாமிதற்குச் சற்றேனு மையமிலைப்—பூமிமிசை (ருசுக)

யெல்லார்க்குந் தேவாயிருக்குமவ னவ்வவர்செய்
சொல்லாரும் பத்தினிலை சோதிப்பான்—பல்லாற்று (ருசுஉ)

லோர்வடி விலான்றனே யுள்குவா ருள்ளத்து
ணேர்வடிவு கொண்டுநேர் நின்றருளி—பார்வத்தா (ருசுங)

லாங்கவருட் கோள்கட் கமையவருள் புரிந்து
தேங்குகடல் சூழ்புவிக்குந் தேற்றினுற்—றீங்கென்னை (ருசுச)

யன்றெனநீ மீட்டுமறைகுறி யேலூனுணவை
நன்றிவையென்றே யுண்டானு கண்டா—னென்றனையா

254.

---

* லூக்கா - XXIV - 41-42.

னஞ்சினையு முண்ணநீ நாடவலே யேனூனு
மஞ்சா தருந்தற் கமைதிகாண்—நுஞ்சமய (ருசுசு)

வீரமுனி பிரான்சிஸ்கு மெல்லியனுஞ் சுத்தவுண்டி
சீரடைய வுண்டதாச் செப்பியநீ—நேரா (ருசுஎ)

வசுத்தவுண்டி யூனென்ற கற்றிவிடா தூனைப்
புசித்தல் விடாயேற் புசிப்பாய்முன்னம்—பசித்தருந்து

முனுசை யாலுன்னுயிர் செகுத்தோ ருனுருவ
மானுற் கொன்றுண்ணு தமைதிகொலோ—நானு (ருசுக)

விதமான வூனும் விடாதருந்தித் தேக்கி
மதமா முடலே வளர்ப்பாய்—பதமான (ருஎ0)

ஞீனியில்லாசை தெவிட்டாத மாந்தர்க்கி
யோனியேதெய்வ மெனவுரைத்த—ஞானியுரை (ருஎக)

438—410.
மெய்யென்று தேரவெருவிதயோ னிக்கருத்தஞ்
சையென்று பேசிநீ சாட்சியிட்டாய்—சைவத்தைத் (ருஎஉ)

## அனுதார விவகார நிடுதனம்.

தூஷித்தாய் முற்றச் சுருதியெலாங் கற்றவன்போற்
கோஷித்தாய் வேறுபல கூறித்து—வேஷித்தா (ருஎங)

366.
யச்சிவனூர் தங்குறி யன்றற்ற தென்றுயக்குறியை
யச்சிவனுப் பூசிப் பாரன்பரொன்றுய்—நச்சியவன். (ருஎச)
367.

55—554.
வீரியத்தைக் கீழே விடுத்தானென்று யந்தக்
காரியத்தைச் சொல்லநகை காணுமென்றுய்—வீரியம்போய்க்
555.

221.
காயிலொளித்தா னென்றாய் காத்தானரி யென்றாய்
சேயிருவ ரெச்சஞ் சிதைப்பதற்குப்—போயிருந்து (௫௭௬)

224—225.
‡முண்டெகளித்தா னொருவ னென்றாய் பெண்கணடங்
கண்டெகளித்தா னொருவன் காணென்றாய்—பெண்டணைத்
90—91.

287—288.
தந்தா னொருவனுக்குத் தானுவென்று யுன்மனது
வந்தவந்த வாக்கா வனைந்தனையால்—வெந்தெழுந்த (௫௭௮)

விம்மாற்றஞ் சைவநூ லெந்நூலுட் கண்டனைசொல்
சும்மாவேன் றுள்ளித் துடிக்கின்றாய்—பொய்மாற்றங் (௫௭௯)

கூறி வெறிகொண்டோர் குளறுவதை நீகுளறா
தாறியிருப்பா யிவ்வா றுங்காங்கு—வேறியம்பு (௫௮௦)

மாறுகோ ளத்தனையு மாறுகோ ளென்றுணர்த்தி
வேறுகோள் காட்டி விலக்குமிடத்—திறிலதா (௫௮௧)

மிஞ்சி யளவுக்கு மேலாய்விரியும் விரி
வஞ்சிவிடுத்தா மதுவுமன்றிக்—கொஞ்சிப் (௫௮௨)

193. 223-245-247-258—264.
பதி பசுபாசத்தியல்பும் பார்த்தவன்போ னீயுங்
குதிகுதித் தெம்மீதவினுக் கோத்தாய்—மதியில்லா (௫௮௩)

யன்னவற்றை நூல்கொண் டறிந்தா லறிந்திடத்தே
யன்னவினு வற்றொழிந்த தாய்ந்துணர்வாய்—பின்னுமிதை

மேற்கொள்ளா யுன்னுயிர்க்கு மித்திரனும்பத்திரிகை
யாற்கொண்டா யென்செய்வா யந்தந்தோ—மேற்கோளா

னுன்னூல் பழுதென்று னுண்மைபெறு மேதுவினால்
நன்னா லெனங்யாய நாட்டலொழித்—துந்நூலுட் (௫௮௫)

குற்றமுள தென்றசொன்னாற் குற்றமுன்ற னூலினிடத்
தற்றிடுமோ வுற்றிடுமோ வாய்ந்துபார்—மற்றுநீ (ருஅள)

குலாலசௌளசி கோபமான நிக்கிரகம்.

271.
யாழிவாய் மண்கொண் டமைத்தகுட மோடுசட்டி
தாழி மிடாக்கலசஞ் சாலவே—யேழனமா (ருஅஅ)

272.
யேனெம்மை யிவ்வா றியற்றினு யென்னுமதோ
மானிடர்பல் வேறுரு வமைந்தார்கட்ம்—மேனிக் (ருஅகூ)

273.

274.
கிசையவுடை யாதிகளை யீந்தாற் குறைவென்
னிசையென்றாய் மூடர்க் கிறைவ—வசையொன்று (ருகூ0)

மட்பாண்ட மிக்க சட்டமாகு மிருவினைச
ணட்பாகா வானு நரகுமிலைத்—திட்பமுள (ருகூக)

மானவரு மந்த வருப்பினரோ வாபாச
ஞானமுனக் கேசொந்த நாயகமா—மீனக் (ருகூஉ)

கட்மாதி வாதித்துக் கண்டித்துச் செய்மண்
ணுடையானைக் கேளாத துன்மை—சடமர்கு (ருகூரு)

மங்கதனைத் தண்டனைக்கா ளர்க்குவிப்பா ரில்லையே
யிங்குனக்கு மற்றோ விசைத்திடா—யுங்கண்மதத் (ருகூச)

தாவிமுனமிருந்தா லன்றோ வளவெடுத்து
நீவிகொடு சட்டை நிருமிப்பீர்—தாவுபுயம் (ருகூரு)

வீங்கு குயவன் விதவிதமாப் பாண்டமதை
வாங்குவா ரின்றேல் வனையானே—யாங்கவனுஞ் (ருகூகூ)

சட்டை சிறுவர்க்கிசையத் தைப்போனுஞ் செய்வதவ
ரிட்டமல வேற்பவர்தம் மிட்டங்காண்—வெட்டவெளி (ருகூஎ)

## சிருட்டியாதிக் கதைத் தேற்றம்.

யான பொருளாச் சிறுவராயி ஞேருந்தெரிதற்
கான பொருளை யகத்தடக்கி—மானவருள் (௫௯அ)

தோட்டத்து வேலைதுறந்த கூலிக் காரக்
கூட்டத் தவர்கள் குழுமியே—நிட்டும். (௫௯௯)

பழங்கதையை நூலாகப் பாவித் தழக்கிற்
கிழக்கு மேற்குக் காட்டுகிற்கும்—பழக்கம்போ (௬00)

277-282-290-213-214-216-219-320.
லெல்லாங் குறிப்பென் றெடுத்தா யொருகோப்புச்
சொல்லால் விளக்காத தோட்டமுன் னூற்—கில்லாத (௬0௧)

போமோ மாமாலத்தாற் போக்குரைத்தாலுந் நல்ல
தாமோ வதைச்சற்று ராய்கிற்பா—ஙாமோசே (௬0௨)

* யாதி யிரண்டா மூன்றுமத் தியாயங்களிலே
யோதியுள வாசகங்க ளோதக்கே—ணீதிபெற (௬0௩)

தேவனறு நாட்கிரியை செய்து முடித்ததற்பி
ஞேவியே மூாநாளிலோய்ந் திருந்தா—ஞுவதஞு (௬0௪)

லேழாந் தினஞ்சுத்த மெய்தியது சிட்டியெலாந்
தாளா தியற்றித் தரணிமண்ணு—லாளாக்கிச்] (௬0௫)

சீவசுவா சத்தைநா சித்து வாரத் தூதிச்
சீவாத்து மாவாகச் செய்ததற்பின்—பூவுலகிற் (௬0௬)
கிட்டிசையே தேனிற்கிளைத்த பல விருக்கத் [யே.
தோட்டமொன் றுண்டாக்கி யந்தத்தோட்டத்து-மாட்டிடை

சீவம்ரமோடு நன்மை தீமை தெரிவிக்குமரந்
தாவமுளைப் பித்துத் தண்ணீர்பாய்ச்சற்—காவதென (௬0அ)

---

* தேம்பாவணி ஞாபகப்படலம் 109—121-ல்
இதைஒருவாறு திரித்துக் கூறப்பட்டிருக்கிறது.

வோர்கதியே தேனதன்க ளுண்டாக்கி நான்குமுக
மார்கதியாய்ப் பீஷேனே யாதியநாற்—பேர்கொண்டு (௬0௯)

செம்பொன் மேவும்மவிலாத் தேசங் கூஷாதிகளுக்
கும் பெருகியோட வுஞற்றியபி—னிம்பருள்ள (௬௧0)

காவின் வினைசெயற்குங் காப்பதற்கு மாதாமைக்
கூவியதில் வைத்திட்டங் கொண்டபடி—நீவிரும்பு (௬௧௧)

மித்தோட்டத் துள்ளமர மெல்லாந் தருங்கனியைத்
துய்த்திடுதி நன்மைதின்மைத்தொன்மரத்தி—னுய்த்த (௬௧௨)

கனிபுசி யாயாக வெனக்கற்பித் துண்பாயே
னனி மரிப்பாய் நிச்சயமந்நாளே—யெனவிதித்தவ் (௬௧௩)

வாதாந் தனித்திருக்க லாகாதென வுறக்க
மீதாகச் செய்துவிலா வெலும்பான்—மாதாக்கி (௬௧௪)

யவ்விருவோ ரேகாங்க மாயிருக்கச் செய்ததற்பி
னவ்விருவோர்தோட்டத்தமருநாள்—வெவ்விடத்துப் (௬௧௫)

பாம்பொன்றே தேவன் படைத்தபிராணி கட்கெல்
லாம்பொல்லா தாச்சூதறிகரித்த—தாமதனு (௬௧௬)

லேவாளெனும் பெண்ணிடத்தணுகி நன்மைதின்மை
தாவாதறிமரத்தின் றண்கனியை—நாவாரத் (௬௧௭)

தின்றுன்மரிப்பதிலைத் தேவனெனக்கண் திறக்கு
நன்றுவதுந்தீது நன்குணர்வீ—ரென்றவுட (௬௧௮)

னக்கனியைத் தின்றவளவ் வாதாமுக்குங் கொடுக்க
வக்கனியை யன்னோ னருந்தியபின்—மிக்கவவர் (௬௧௯)

கண்திறக்கப் பட்டனவாங் கண்டனராமம் மணத்தைத்
தண்திறத்த வத்தியிலை தைத்துடுத்து—நண்பகலிற் (௬௨0)

காற்றினிற் ரேட்டத்திற் கடவு ளுலாவுசத்த
மேற்ற விருவோரு மெதிர்வருதற்—காற்றிலரா (௯௨௧)

யஞ்சிமரத் துண்மறைய வாதாமே யெங்குற்றாய்
மிஞ்சியெனத் தேவன் வினவியிட—வெஞ்சுகிரு (௯௨௨)

வாணியெனக் கண்டேன் மறைந்தேனென வுனைநீர்
வாணியெனக் காட்டினவன் மற்று—ரேணில் (௯௨௩)

விலக்குகனி யுண்டனையோ வென்றுரைப்ப வாதா
நலத்தவளை நீர்கொடுத்த நாரி—விலக்குகனி (௯௨௪)

தந்ததனை யுண்டேன் சரதமெனத் தேவனதின்
முந்துமே வாளை முகநோக்கி—யிந்தவித (௯௨௫)

மேன்புரிந்தாய் நீயென்ன வேவுசர்ப்ப வஞ்சனையா
லூன்புரிந்தே னென்றாக விலவந்தப்—பாம்பினைப்பார்த்(௯௨௬)

திவ்வாறு செய்தமையா லெல்லா விலங்குகட்கு
மொவ்வாய் வயிற்றினா லூர்ந்துமண்ணை—வெளவர் (௯௨௭)

யுனக்குமுன் சந்ததிக்கு முற்றபகை யன்றே
டனக்குமவள் சந்ததிக்குந் தந்தாம்—மனக்கசப்பா (௯௨௮)

னஞ்சுத் தலையை நறுக்குவார் நீயவரைக்
குஞ்சுங் குதிக்காலைக் கொத்துவாய்—மிஞ்சுகவேன் (௯௨௯)

றேவாளே கர்ப்பத் திடைவே தனைமிகுத்துப்
பூவார நீபெறுவாய் புத்திரரை—யோவா (௯௩0)

வடிமையென நின்புருஷற் காகினை மாவா
யடிமையென நின்னை யவராள்வார்—படியின்மிசை (௯௩௧)

யாதாமே நின்றன் மனையாட்குச் செவிகொடுத்துத்
தீதாக் கனிபுசித்த நீங்காலே—பூதாளு (௯௩௨)

முன்னிமித்ரஞ் சாபமுறு முன்னுயிர்நா ளுள்ளளவும்
மன்னிக் கிலேச மருவியே—யிந்நிலத்தி (௬௩௩)

லுண்டலைந்து வாழ்வா யுயர்முட் செடிபூண்டை
யுண்டபெண்ணும் பூமி யுனக்கெதிரே—மண்டன்

னுருவா யுனைவ நந்த வுண்மையா னீமண்
ணுருவா யடங்குவையென் றோதி—யிருவருக்குந் (௬௩௫)

தோலங்கி செய்தவர்கள் சுற்றத் தரிப்பித்து
மேலக் கடவுள் வினயமுனிச்—சாலவே (௬௩௬)

நன்மைதின்மை கண்டுநா னம்மிலொரு வன்போன்ற
தன்மையாற் சீவந் தருக்கனியும்—பின்புசித்துச் (௬௩௭)

சீவனுளனாய் நித்ய சீவனடையாதபடி
காவலை விட்டோடக் கடவனென்றார்—காவலென (௬௩௮)

வெந்தழலேவைக்கார் [illegible]
ரிந்தக்கதைமுற்று மென்னுங்கால்—விந்தைச் (௬௩௯)

சிரிப்புப்பொருள்கீழ்யாஞ் செப்புபொருளன்றிக்
குறிப்புப்பொருள்பிறிது கொள்ளா—துரைப்பக்கேள் (௬௪௦)

வதேனோர்தேயமதி லெய்தியதுமோர்தோட்டம்
மாதேவனென்பாரோர் மானிடனே—யாதாமா (௬௪௧)

மேன்மையவன்கைக்கீ ழிசைந்தான்றோட்டக்காவல்
வாழைமுதலா மரம்வைத்தவ்—வேழையுன்னை (௬௪௨)

வெல்லாமவன்கூலிக்கென்ன விட்டுமெத்தியிலே
நல்லமரந்தானருந்த நாடியே—சொல்லுமிது (௬௪௩)

[கேட்

டின்னவொன்றுதென்றுபயஞ் சேர்த்திவைத்தானம்மொழி
டன்னவன் மெய்யென்றேயமைந்தடங்கப்—பின்னமொரு

சர்ப்பம்பழம்புசித்துஞ் சாவாமையாற்றேறி
யற்பமனிதன்பழத்தி னாசையாற்—சொற்பக் (௬௪௫)

களவாண்டுண்டான் களவுகாக்கவறியாமே
யுளம்வெருவிச்சற்றே யொளிக்கு—முளவறிந்து (௬௪௬)

கொண்டம்மனிதனைமுன் கூவிவிசாரித்துணர்ந்து
கொண்டவன்மேன்மட்டடங்காக் கோவமாக்—கண்ட (௬௪௭)

வொருமரத்தினொண்கனியை யுண்டசுவையான்மற்
றொருமரத்தினொண்கனியு முண்பா—னருமையுறு (௬௪௮)

நல்லபழம்போனா னமக்கினிமேலேதுபிழைப்
பில்லையெனநீக்கிவிட்டா னேழைதனை—மெல்லவவன் (௬௪௯)

வேற்றுவழிப்பட்டலைந்து வீயவவன்றன்வழியே
தோற்றுவோர்முந்துபழந் தொல்சரிதஞ்—சாற்றவவர் (௬௫௦)

சந்ததியார்தாங்கேட்ட சங்கதியோ டேமயங்கப்
புந்திக்கிசைவ புகுத்தியே—யிந்தவகை (௬௫௧)

நூலாயெழுந்ததன்றி நன்னூலாராய்ந்துணர்ந்த
மேலார் கொள்ளாரிதையோர் வேதமென்று-மேலுமவ (௬௫௨)

ரம்மணமாவுற்றார்பின் பத்தியிலைத்தடுத்தார்
செம்மைபெறுதோலுடைபின் சேர்த்தினார்—தம்மதத்தைக் ()

காலத்துக்குத்தக்க கோலமாக்கற்பித்தார்
சாவவிதற்கென்னையோ சந்தேகம்—மேல்தைப்போ (௬௫௪)

ஊரில்வழங்குகதை யுண்டோரனந்தம்நீ
தேரவிரண்டொன்று செப்புவாம்—பாரதனை (௬௫௫)

யாதியிலேபக்கி மிருகாதியெல்லாம்பேசினவாஞ்
சேதியொன்றும்மானிடர்க்குச் செப்பீரென்—றோதியதை ()

மாடுதேப்பிச்சொல்லிவிட்ட வன்மத்தாலேயிறைவன்
பாடுபடப்பேசாமற் பண்ணினனும்—கூடுமேந்த (க௫எ)

காண்முதலாப்பேசாமை நண்ணுமாமன்றியவை
மாண்பொழிந்துகீழ்ப்படிய வாய்த்தனவாங்—சேண்மற்று

முன்னுளிற்றேவன் முழுதுலகமும்படைத்தே
யின்றுசெய்கின்ற விறப்பகற்றி—மன்னவைத்தா (கூ௫க)

ஞவியழியாதசேகர் பழம்போலுரிமேன்
மேவியமர்ந்தார் விருத்தர்சிலர்—பாவிகளாத் (கூகூ௦)

தேவனை யெண்ணுத திறத்தா லருவருந்து
வீவடையச் செப்பியொரு விண்ணவனைக்—கூவிப் (கூகூக)

பழமுதிர வென்று பறையறையச் சொல்ல
வழகுடையோ னவ்வா றறைய—மழவினைஞர் (கூகூ௨)

கல்லெறிந்துநின்ற கடுப்பா லவன் வெகுண்டு
சொல்லெறிந்து வேறுபல சொற்சேர்த்தி—வல்லமையாற்

பூவுதிரப் பிஞ்சுதிரப் பொங்குகனி காயுதிரச்
சாவுபறையான் முழக்கிச் சாற்றினனு—மாவதனை (கூகூ௩)

லெப்பருவத்துள்ளு மிறப்புவந்து சேர்ந்த தென்று
செப்புகதையொன்றிவற்றைச் சீர்தூக்கிற்—றப்புமொழி

சொல்லுமுன்ற னூலுக்குத் தோற்குமோ தோற்காதே
மெல்லவவைக் கும்மெழுது வ்யாக்யானம்—நல்ல (கூகூகூ)

கதையென்ற தன்பொருடான் கட்டு மொழியென்பா
ரிதைமறுப்பா ரிவ்வுலகி லில்லைச்—சதையெனநீ (கூகூஎ)

197.

மெச்சாத் தெச்செல்லா மெச்சிய வுன்னூலையே
பொச்சாப்பினுற் கதையாப் போக்கினுய்—பிச்சா (கூகூஅ)

37 ?

நிசக்கதையை நிந்தித்த னியாயமோ வென்றாய்
நிசக்கதையுங் காதை நிசமேயாய்—வசைப்படுமோ (௩௬௯)

னீயே கதையென்று நிச்சயமா யொப்புக்கொள்
வாயேற்பின் பேச வழக்குண்டோ—வேயேநீ (௩௭0)

யாற்றிற் குளித்தே யலம்பப்போய் நீரொழிந்த
சேற்றிற் கிடந்து திளைத்தலையே—யாற்றுற் (௩௭௧)

பாசுரப்ராமாணிய விவேகம்.

பழுக்காது பின்னிற் பழுதநீ சால
வழுத்திருயுங்கள் குருமாரை—மூழுத்திறஞ்சேர் (௩௭௨)

315—316

தேவனருள் செய்கின்ற திட்டார்தப் பாடல்சில
பாவ குருமார்பாற் படுத்திரு—லாவதென்னே (௩௭௩)

காட்டுவமை கேட்டுவமை காயுவமைமெய்க்குயந்தை
யாட்டுவமை யன்றோர்க் கமைத்திருக்க—வீட்டிஞறு (௩௭௪)

317.

குட்டிதனை வாய்க்கௌவிக் கொண்டேகும் பூனையைக்கொண்
டொட்டிருு லவ்வுவமை யொவ்வாதே—விட்டிதற்குச்சொல்

சோறு யுவமைமூற்றுங் சொன்னும் மனிதர்களா
டானு லதிற்சற்று மையமில்லை—யீனுத (௩௭௬)

பூனையுவமை பொருத் துறுமாற் கண்மூடி
ஞானியெனப் பேர்பூண்டு நாடியெலி—தானெதிரில் (௩௭௭)

வந்தவுடன் பாய்ந்து வயிறு நிரப்புதல்போ
லிந்த வுலகோர்கடமை யேமாற்றி—வந்தவர்மேற் (௩௭௮)

பாய்ந்தவரை யாழப் படுகுழியில் வீழ்த்தியதில்
வாய்ந்த வயிறு வளர்க்கையினு—லேய்ந்தவிதே (௩௭௯)

பின்னுமொரு வாற்று லிசைவாகும் பாற்குடத்திற்
றுன்னுபூனைக்கெலிமேற் றேற்றியக்கான்—மன்னியபா

லாசையையும் விட்டேயவ் வாகுவின்மே லாசையிறாற்
பூசையதை யேபற்றும் போயென்பார்—காசை (௯௮௧)

விடாதுதிவாறு யலைந்தவீரமுனி போல்வார்
கெடாதபுகழ்ச் சைவர்கள்பாற் கிட்டி—நடாது (௯௮௨)

மூலையுண்ணிநீருண்ணு வேட்டெருமைமூடர்
சலமின்றிச்சீ நுரைப்பார் தர்க்கர்—நிலையாப் (௯௮௩)

பொருளாசைபொய்சேர் புகழாசைகொண்டே
யிருளாசைசேர விறந்தார்—மருளகல (௯௮௪)

வின்றோரன்றோரா சிரியரலரென்றெதிர்ந்து
முன்றோறிறுமற்று மோதிலவாம்—பின்னறிநி (௯௮௫)

## கணிதஞாலமோசனம்.

301—305.
பாண்டவரைத்தப்பென் படவென்றுவோர்தம்மையெமக்
கிண்டவிசைத்தாயிசைவின்றி—யீண்டொன்றே (௯௮௬)

டொன்றுடன்மற்றொன் றிசையவுற்றதுமூன்றென்றும
லொன்றென்றேகூறு முணக்கிசையு—மன்றியுநீ (௯௮௭)

677—678—679.
கலியுகஞ்செய்யாண்டின் கணக்கிபெவ்வாற்றல்
வலியுறுத்திமேலும் வகுக்கும்—வெலியேல் (௯௮௮)

## உயிரொன்றபதப்பொருள் கோள்.

320—321.
உயிருள்ளவையெல்லா மெவ்வுஞ்சரயமாம்
பயிருக்குயிரின்றே பாரென்—றுயர்வாகப் (௯௮௯)

பேசியமோனிடரே பெற்றாருயிரென்றால்
யோசியாரோவுன் னுயிர்நிலையை—யேசிநீ (௯௯௦)

## நாவிதக்குப்பை விவரணம்.

327.
மங்கலவன்குப்பையென வைதனையாலென்றாலே
யங்கதனுக்குப்பொருத்த மாகாதே—யுங்களவர் (௬௯௧)

மங்கலவனூகி மயிர்வினையைச்சவ்வேரிக்
கிங்கிதுகாறுஞ்செயலா லேய்ந்திடுங்கா—ணங்குப் (௬௯௨)

324.
பல்ஞானம்பன்னீதி பன்னுமென்றாய்வேத
மலவுலகநூலதுவே யாகு—நலமாரும் (௬௯௩)

ஞானம்பலவாய் நவிலுமெனில்மெய்யான
ஞானமலமுற்றிலுமஞ் ஞானமே—யானதனாற் (௬௯௪)

பொய்ஞ்ஞானமுன்னூல் பொருந்துமெனக்கைப்பாரும்
கைஞ்ஞானங்காட்டுமென்றுங் காட்டிவிட்டா-யெஞ்ஞான்று

607.
மொன்றேமெய்யானபொருளொன்றே மெய்யானவுணர்
வொன்றேமெய்ஞ்ஞான நெறியுற்றுணர்தி—சென்றே.(௬௯௬)

விரிந்தமனமொன்றுபட்டு மேவுவதேஞானம்
விரிந்திடுமேலஞ்ஞான மென்னத்—தெரிந்தோர் (௬௯௭)

குறிவகுத்தவேதமொன்றே கூறுமதனாலே
யறிவனூல்வேதமென்பராய்ந்தோர்—நெறியே (௬௯௮)

* யலகுசால்கற்பினறி வுநூல்கல்லா
துலகநூலோதுவ தெல்லாங்—கலகல (௬௯௯)

கூஉந்துணையன்றிக் கொண்டுதடுமாற்றம்
போஒந்துணையறிவா ரில்லென்றே—யாஅந் (௭00)

* நாலடியார்.

தகையமொழிமேலோர்கள் சாற்றுவாரெந்த
வகையாலும்வைவில்லழுவே—தொகைசேருஞ் (எ0க)

## சோதிடாதி விவாத நிவிர்த்தி.

342—356.
சோதிடத்தைப்பொய்யென்று சொற்றுயதற்காக
வாதிடற்குன்றேமு மனம்பொருந்தோம்—மாதிடமா (எ0உ)

யெத்தனையோபேர்மொழிதலெள்ளளவுந்தப்பாம
லொத்துவருத லுணர்ந்துள்ளே—மித்ததியிற் (எ0ங)

338—341.
கொண்ட புதியபூ கோளபகோ ளங்களுணக்
குண்டெனல் போலோர் சாருளறிவைத்தாய்—கிண்டில் (எ0ச)

விவிலியப் பேர்முற்றும் விலகி வில்விக்லென்றே
கவிலுதைப்பேர் பூண்டுநலியுங்—தவவிக்கி (எ0ரு)

துட்டதெய்வ மென்றமர்கள் சொல்லுவது மாவுலகரு
வெட்டலுறுந் தேவாம் விலங்காதி—கெட்டபலி (எ0சா)

வாங்குவதனுலேகோ வாதுட்ட தேவதையா [ம்
யோங்குவன்முன் பேய்க்கதையு முய்த்துணர்தி—யீங்குபினு

## மோசே கொலை தேவத்வ மாகாதெனல்.

396—397. 400—401.
மோசே கொலைபுரிந்த மூர்க்கனலத தேவனரு
ளேசேரு மென்றுயே காந்தத்தின்—மாசேறிச் (எ0அ)

‡. செய்யுங் கொலைக்கரச தெண்டனைக்காகப் பயந்தே
யுய்யுமாறோடி யொளித் திருந்தோன்—மெய்யனேல் (எ0கூ)

நீயுனது மாற்றலரை நேர்ந்து கொலைபுரிந்து
மாயும் படிச்செய் மறைந்துவிடு—ரரயர்கண்டாற் (எக0)

‡.2. மோசே II. 11—15.

சாமி செயலாமென்று தப்பவகைபார் பார்த்தாற்
சாமி சாமிப்பேர் தருமுனக்கே—காம (௭௧௧)

பௌடீக தரிசனோபமான சம்பாவனம.

411—412—413.

விடுகதையேற் கும்பொருளால் வேதத்திலோதப்
படுகதை யாமென்றே படித்தாய்—விடுகதைதா (௭௧௨)

னற்பொருளொன்றின்றி நகைக்கிடமாகும் பொருளாச்
சிற்பொருளா வேருச் சிதைந்தழியும்—பற்பல்பொரு (௭௧௩)

டந்த பௌடீக தரிசனங்க ளாங்கவைபோற்
கந்தலென்ற வாய்க்கிடுவொங் கற்கண்டு—நந்தும் (௭௧௪)

299.

பொருண் மாற்றணியோ பொருந்துமே மாற்றணியோ
மருண்மேற் றணியோ மதித்துப்பார்—பொருண்மேற்கொள் ()

கத்தோலிக்காசார்ய குணவியர்த்தீ கரணம்.

408—409 589—597.

மகாவற குருக்கமளாடு குட்டிச குருக்களையும்
நீவிடுதாவாக நினைத்து வைசை—தூவினாய் (௭௧௬)

410.

யூதகுரு மாரென்று முன்குருவை யுண்மைபெறும்
யூதகுருமாரதுகேட் டோடிவந்தி—யூத (௭௧௭)

குருமாரல் லீர்வேர்க் குருமாரென் பாரோ
இருமாறிப் போய்விடுமோ வுண்மை—தருமாறென் (௭௧௮)

றற்றப் புகழ்ந்தவுங்க ளாசிரியர் தஞ்சரிதஞ்
சாற்றியுன்றன் வாயினுக்குத் தாளிடுவா—மேற்றிடுதி (௭௧௯)

பாவவரி வாங்கப் பயிற்றினதார் பாவமெலாம்
போவதற்குமூட்டையுற புண்ணியத்தை—யீவமெனக் (௭௨0)

காசு பறித்தவரார் காசுத்தரம் போட்டு
வீசு வெகுசீட்டு விற்றவரார்—காசுகொளச் (௭௨௧)

சவ்வேரியாற்கு க்ஷவளம் செய்திநபவ ரார்
சவ்வேரிக் காசேர்ந்த தம்பிள்ளைக்—கிவ்வளவு (௭௨௨)

பொன்னென்று வாங்கிப் பொருள் சேர்த்திடுபவர்யார்
முன்னின்றுபாவ மொழிந்தகலுங்—கன்னியரைக் (௭௨௩)
கள்ளத்திற் சேர்ந்தவர்யார் கன்னிமடத்திற் கேசக்
கள்ளவழி வைத்துக் கலந்தவர்யா—ருள்ளகத்தே (௭௨௪)
பெண்கள்சொலை யுண்ட பிரேத மிருந்தெடுக்கக்
கண்கள் பிசைந்து கலங்கினர்யார்—பெண்கடமை (௭௨௫)
வைப்பாக வைத்தரு மாரோழ்கு ரோசுபணந்
தப்பபராதங் கொடுக்கச் சாற்றினர்யா—ரிப்படியே (௭௨௬)
கத்தோலிக் கக்குருமார் காதைசொலில் வாயுஞ்ச
லித்தோதவர் நெஞ்ச முஞ்சலிக்கு—மெத்திமுனந் (௭௨௭)
* தட்டா னொருவனொரு சன்யாசியாய் மோசே
கெட்டானென் செய்கைக்குக் கீழ்ப்பட்டு—விட்டான் (௭௨௮)
பர்வமன்னிப் புச்சீட்டென் பாலுளது வாங்குவரோற்
றேவமாதா தோளைச் சேர்ந்தவர்தம்—பாவமும்போ (௭௨௯)
[பாற்]
மென்றுசொல்லிச் சீட்டுவிற்பா னெந்தறிந்தோ னன்னவன்
சென்றெதிர் காலத்திடையான் செய்பாவம்-பொன்றுதற்குஞ்
சீட்டுத் தருவதுண்டோ செப்புமென வப்பொருளை
யீட்டுவோ னுண்டென்றியம் பவது—கேட்டுப் (௭௩௧)
பணங்கொடுத்து வாங்கினான் பாவமன்னிப் புச்சீட்
டிணங்கி விற்போனைக் கொள்ளையிட்டான்—பணங்கவர்ந்து
சீட்டதனைக் காட்டிச் சிரிப்பித்தா னிற்கவிது
வீட்டின் கண்ணுருக வொருமெல்லியலைக்—கூட்டிவந்து (௭௩௩)
பாதிரியார் முத்தியிடப்பற்றி யொளிச்சித்ர படம்
வீதிதொறு நின்று விலைப்படுமே—லோதி (௭௩௪)
‡ னைவிளையு மன்றோ நடுக்களத்திற் றெருங்கு
நகைச் சிலுவைவிற்றுலாட்டேறித்—தொகையடைந்த (௭௩௫)

---

* ரோமான் மார்க்கச் சீர்தூக்கல் 14 அதிகாரம் 4-5 பிரிவுகள்.
‡ கொழும்பு முசலீம்நேசன் - சென்னை சுதேசமித்திரன் 85 - ஆம் ஆகஸ்டு மீ 10உ

பேதைதனைப் பாவமென்று பித்தேற்றியப் பொருளை
வாதைகெடக் கல்லறையில் வைப்பித்துச்—சூதையுள்ளே

கொண்டோன் மறுவேடங் கொண்டுபொருள் கவரக்
கண்டுபிடித்த திக்நாட் கற்பனையோ—பண்டெண் (௭௩௭)

டொருபாதிரி வேறொரு பாதிரி மேற்
பெருவாது கொண்டு பிணங்கிக்—குருவா (௭௩௮)

மிருதிறத் தார்தம்மு ளெதிர்த்து விவகாரந்
தருதிறத்தில் ராசசபை சார்ந்தே—கருதிவந்த (௭௩௯)

பூமிவழக் கொன்றுமே போதுமெனிற் பற்பலவு
மீமிசையென்றிங் கன்விலக் கினமால்-யாமினுங்கேள் (௭௪௦)

ஏசுவின் சகோதர நிர்ணயம்.

444.
தச்சக் குலத்திலொரு தாய்வயிற்றி னல்வரொடு
மூச்சப் படவே சுகித்ததுவே—நிச்சயங்கா (௭௪௧)
ணைசுதலைச் சனென லென்றே சான்றதற்கு
வீசுபல மேற்கோளும் விள்ளுவாம்—யோசியாய் (௭௪௨)

418.
தால்ந் தலைச்சனுக்குச் சாற்றுபொருள் வேறெனல்போற்
சாலமொழிபேசத் தலைப்பட்டாய்—மேலதைநீ (௭௪௩)

447
முன்கொழித்த காலென்றாய் முன்னென் விதப்புமொழி
பின்கொழித்த காலும்பெறுதுகொலோ—பின்னுதித்து (௭௪௪)

வந்தோ ரிடைச்சனது வாராதேற் பிள்ளையொன்றின்
மூந்து தலைச்சன் முறையேதோ—விந்தவிதம் (௭௪௫)

வெட்டவெளிக் கையமென்றோ மேவுவது வெள்ளெழுத்தேன்
குட்டிச்சுவர் முட்டிக் கொள்வதற்குக்—கெட்டிகெட்டி (௭௪௬)

* சூசை மரியாளின்—சேருள்சேர்ந் தனுபவித்த
லேசைப் பெறும்வரையி லில்லையென்று—லேசு (௭௪௭)

---

மத்தேயு I-25.

பிறந்தபின்பு தோள்சேரப் பெற்றனனே
சிறந்தபொருள் பிறிதென்செப்பாய்—பிறந்திசிமூர் (௭௪௮)

* யூதர்சிலரேசுவின் பாலுற்றிவனைப் பெற்றெடுத்த
மாதாவுநம்மூர் மரியாளே—யூதாவு (௭௪௯)

மற்றுமொருமூவருடன் வந்து பிறந்தோனிவனே
குற்றமுறு தச்சக்குலத்துதித்தோ—னிற்றிவனுக் (௭௫௦)

கெய்தியவாறென்னே யோவென்றேசுமுன்னிலையில்
வைதிருத்தலுன் வேதவாக்கலவோ—வெய்தியதோ (௭௫௧)

† சோதரருந்தாயும்வந்து தோன்றினரென்றேசுக்
கோதினவர்வேறுமுறையோரேயோ—வீதன்றித் (௭௫௨)

‡ தாயோடுசீடர் சகோதரரும் ஏசுவின்பின்
போயோரூர்தங்கியதும் பொய்மையோ—தீயசொலி (௭௫௩)

வாழ்த்துதல்போலுன்றேவை வைதாய்மனத்தகத்துக்
காழ்த்த வயிரம்வெளி காட்டினையோ—சூழ்த்துமுனம் (௭௫௪)

யூதர்கடாமேசை யுபத்திரவஞ்செய்ததிலும்
நீதிரளாச்செய்தாய் நினைக்குங்கால்-யாதெனிற்கேள் (௭௫௫)

மரியாள்தான் கர்ப்ப வதியானமார்க்கஞ்
சரியா வென்கின்றசமயத்—தரிதாக (௭௫௬)

490

|| அன்னம்மையின் பௌத்திரனென்று யேசுவினை
யென்னகநி மரியாளெய்தினள்பார்—அம்மோன்முன் (௭௫௭)

* மத்தேயு XIII. 55—56. மாற்கு VI. 3.
† ஷை XII. 46—47. மாற்கு III. 31—32.
‡ யோவான் II. 12.
|| தேம்பாவணி தூதுரைப்படலம் 45.

§ றன்ஞேடுடன்பிறந்த தாமாரைமோகித்தம்
மின்ஞேடுசேர்ந்த விதம்போல—வன்னம்மை (எருஅ)

புத்திரன்ருேஊக் களவிற் புல்லி மரியாளீன்ற
புத்திரனென்றன்ருே பொருளாந்தௌ-கித்திரனென் (எருகூ)

ருயாகிற் குற்றமுடையாதேபள்ளிகட்குப்
போயாகிலும்படித்துப் புத்திதெளி—தியாய்சேன் (எசு0)

பொய்படுமொன்ருே புஊ பூணுங்கையறியாப்
பேதைவிஊமேற் கொளினென்பா—ரீதிருக்க (எசுக)

நேத்தியென்று ந்க்கதென்னே நின்னெஞ்சே நீநிஊந்தாற்
றத்திரளாச்சுட்டு விசிந்திண்ணங்காண்—மாத்திரைக்கோல்

மோசே கூட்டிய மனிதர் நிலைமை.

கையாண்ட மோசேயின் கையாட்சி யாமனிதர்
மையாண்ட் காட்டு மனிதரெனற்—கையமென்ஞே (எசுங)

* தற்சாட்சியா மோசே தன்பெயர்கொள் புத்தகமே
நற்சாட்சியாப்பலவு நாட்டுதலாற்—பிற்சான்றென் (எசுச)

னக்காலவாக்கா லரைகுறையா முன்வேத
மிக்காலமுற்றிற் றெனலாலே—நக்காய்கொ (எசுரு)

விந்துதேயந்தானே யெவ்வெத்தேயத்தினிலு
முந்தியே நாகரிக முள்ளதெனச்—சந்தேக (எசுசு)

---

§ சாமுவேல் XXIII. 1—14.

* 2 மோசே XVI. 2-3 4மோசேXVI.2-12-13-14 35-49
ஷை XVII. 3-4 ஷை XX. 1-6.
4 மோசே X. 16 ஷை XXI. 5-6
ஷை XIV. 1—5 5 மோசே I. 35—37.

மெள்ளளவுமில்லா தியம்பவு நீ மற்றதன்பாற்
பிள்ளையென வந்து பிறந்திருந்து—மெள்ளினாய் (௭௬௭)

462—463
மன்னர் தனவான்கண் மதியூக மந்திரிகள்
பின்னமுறுக்கல்விப் பிரியர்களோ—டின்னமின்ன (௭௬௮)

469
மெத்தெத்தனைபே ரிருந்தாராங் கென்றுரைத்தா
யத்தத்தனைபே ரமர்ந்திருந்துஞ்—சித்தத் (௭௬௯)

தொருமித்துன்றேவை யுயிர்க்கழுவில் வைத்தாற்
பெருமைத்தவர்குணமோ பேசா—யுரிமைத்தாப் (௭௭௦)

புத்தியிலாரென்றல் பொருந்துமன்றிநீவியந்து
புத்தியுளர்ரென்றல் பொருந்தாதே—யொத்தியா (௭௭௧)

மேழைமதியோர்கடமை யெத்திமதமாச்சேர்த்தி
வாழுமவரென்றால் வழுவென்னே—பீழையுற்றுஞ் (௭௭௨)

ஏசுவின்புனர்ஜீவன விசாரவினோதம்.

492
செத்துஞ்சாகாதவனுச் சேசுபடிகமுடைந்
தொத்தொளிகுன்றாமேயுறுவதுபோ—னித்தனென்றா (௭௭௩)

யப்படிகம்வேறொளிவேறாக்க வொண்ணாதேசுவினுக்
குப்படிவமோடு யிருமொன்றேயோ—வெப்படியும் (௭௭௪)

பின்னமுற்றவப்படிகம் பின்னமுறவேயொளிரு
முன்னையதாப்பேரொளியின்முற்றாதே—யன்னதென (௭௭௫)

வேசுகழுவேறியிறந்த பின்பு காலரையாத்
தேசுகுறைந்தானென்று திட்டினைகொல்—தேசு (௭௭௬)

வளர்ந்துனதுவைவில் வளரவளரத்
தளர்ந்தேசுதேசழிந்தான்றோ—பளபளா (௭௭௭)

500
கல்லறைவைத்தேசுவினைக்காவலர்கள் காத்தகதை
சொல்லமறைத்தாரென்றுந் தோள்வலிமை—யில்லாப்
505
501
பதினொருவரஞ்சிப்பயந் தோட்டெடுத்தார்
மதியிற்பிணர் திருடமாட்டார்—சதியாகக் (எஎகூ)
502
504
கைக்கூலி பெற்றதனுற்காவலோர் சொன்னதெல்லாம்
பொய்க்கூற்றுமென்று புலம்பிறு—யிக்கதைதான் (எஅ0)

சொல்லிலென்சோரமென்று சொல்லாது விட்டாலென்
வெல்லுமோவுன்றன் விவிலியந்தான்—சொல்லுமதிற் (எஅக)

சந்தேகமன்றே சனித்திருக்கச்சேசுவெதிர்
வந்தேயகற்றல் வழக்கலவோ—வந்திருந்தால் (எஅஉ)

யூதர்திரளெல்லா மொருகோடியிற் கைவசமாந்
நீதகலமன்னவருந் தேர்ந்திடுவர்—மாதர்சிலர் (எஅந)

* கண்டதாச்சொல்வானேன் கண்டதனிற்சந்தேகங்
கொண்டதாச்சீடர் குறிப்பானேன்-னொண்டியொண்டி (எஅச)

யொன்றிரண்டுபேர்சான் றுரைப்பானேனுங்கதுசான்
றன்றெனமேலோர்களறைவானேன்-னொன்றிரண்டோ(எஅரு)

‡ நாற்பதுநாள் காறுமிந்த நாடு திரிந்துஞ்சீடர்
போற்பிறர்தாங்காணமற் போவானேன்-நூற்புதுமை (எஅசு)

ராசசபையேறுமனைவானேன் சீடர்கள்போய்த்
தேசப் பிரசங்கஞ் செய்வானேன்—யோசிக்கி (எஅஎ)

* லூக். XXIV. 9—11.
‡ தேம்பாவணி முடிசூட்டு படலம். 2.

லேசிறந்த பின்மீண் டெழுந்தானெனல் பழுது
பேசிலவன்றன் பிரேதத்தை—யாசித்துச் (எஅஅ)

சீடர்களவாண்ட செய்கை சரதமெனன்
மூடர்களுக்குந்தெளிவாய் முன்னிற்கும்-கூடுதந்தைக் (எஅகூ)

467
கெந்தக்குணமைந்தர்க் கந்தக்குணமென்ற
சந்தப்பழமொழிநீ சாற்றினை—யந்தப் (எகூ0)

பழமொழிவந்துன்னை யன்றோ பந்தித்ததந்தோ
கிழமைபெறுகிள்ளை விடுறாதின்—பழம்பிருதி (எகூக)

|| பிள்ளா யெவ்வாறு நீ பெற்றனைசொல் செய்தவர்பாற்
கள்ளாவிடிலுன் கண்காணுதே—கள்ளந்தா (எகூ௨)

னித்துணையுன் மாட்டே யிருக்குமேலுன்னினத்தோர்க்
கத்துணையசெய்கை யரிதுகொலோ—மெத்தமெத்த (எகூ௩)

வாய்மதத்தாற்பேசி வழக்கிட்டாயுன் மதமுன் •
பேய்மதமாப்பின்பு பிணமதமு—மாயினவாற் (எகூ௪)

கோனியம்மைதன்னை முனங்கூட்டிக் குறைத்தனரென்
றேனியம்பினையதனு லேதுகுறை—கோனியம்மை (எகூ௫)

வஞ்சியம்மையாதி யெலா மாரியம்மைப்பேதங்கா
ணஞ்சிவிடுத்த தலவறிவாய்—மிஞ்சியக்குத் (எகூ௬)

துட்டதெய்வத்திற்குவமை சொன்னதிலைமானிடரு
மிட்டதெய்வ மாவரிறந்த பின்பு—நட்டதுபோ (எகூ௭)

லேசுமொருதேவனென வெழுந்தானென்றுவமை
பேசினர்க்காண்சற்றே பெருமைதந்து—நீசகியா (எகூஅ)

|| பிள்ளைத்தூது 507—(குறிப்பு.)

தேழனஞ்செய்தாய் செய்யாதென் செய்வாய் பாற்சோற்றை
மூழைசுவைகாண முடியாதே—யேழாயுன் (௭௯௯)

வீரியம்போய்வன்மைபோய் மிக்க மெலிவெய்தியினிக்
காரியமொன்றில்லையென் றுகைவிட்டு—மாரியம்மைச் (௮௦௦)

507
சண்டையிட்டபேர்தந்தயிரியத்தையேத்தியவ
ரண்டையிலும் புக்காயடைக்கலமாத்-தொண்டண்டைதி (௮௦௧)

முற்றவுநின் ஏசாமுதலுக்கே மோசம்வரப்
பற்றுவரவுக்குவட்டிபார்ப்பவன்போற்—சற்றுன்றன் (௮௦௨)

519—520
சின்னப்பனுக்காகச் சிறிப்பரிந்தழுதாய்
மன்னுபெரியப்பனுக்கு மாறியழு—மன்னியிவ (௮௦௩)

## கிணற்றுத்தவளை யுருவகவிளக்கம்.

னுண்டுடுத்துவாழு முணர்வுற்றுயர்ந்த மெஞ்ஞானங்
கண்டெடுக்கக் கூடாதகாகூறியினைக்—கொண்டே (௮௦௪)

சமைய விலக்கணங்கள் சற்றேனுமின்றிச்
சமைய விரோதஞ் சமைந்தே—யமைகின்ற (௮௦௫)

நின்சமயங்கூவ னிகர்க்கு மதிலாழ்ந்துழலு
முன்சமயத் தோர்தவளை யொப்பாவர்—நன்னிலைதேர் (௮௦௬)

கோடிசமயங்க டோறுங் கூறுமுடி பத்தனையு
நாடிலடங் கச்சமய ராஜமுடி—சூடுவதே (௮௦௭)

நாட்டுவெளமையொக்கு நன்று முருவகத்தைக்
கேட்டுமிரா நீபொருள்செய் கிற்பதெவன்—காட்டினிடைத்

தங்குங்கிணற்றுத் தவளையொப்பீர் நாட்டுவெள
மெங்குணரவல்லீ ரெனமொழிந்தா—லங்கதை நீ (௮௦௯)

கப்பனடாத்திவளங் கண்டமையே கண்டமையா
யிப்புவனஞ்சுற்றி யலைந்தென்னபய—னிப்புவனஞ் (அகo)

சுற்றியலைந்துகண்ட தொல்லைவளங் காசுபணம்
பற்றுதலே யன்றிமற்றென் பன்னுதிநீ—மற்றவையும் (அகக)

வந்தியரா யுன்னினத்தார் வந்தேற்க மாறும
விந்தியாவள்ளீலென வீயுமென்று—சிந்தியாய் (அகஉ)

எல்லாவளமுமுள விந்தியர்களெவ்விடத்துஞ்
செல்லாமையால் வந்த தீதென்னே—யில்லாம (அகங)

லேற்பதுவு மோர்வளந்தா னென்பாயேலிந்தியர்க
ளேற்பதறியா விகழ்வினரோ—யாற்பரித்து (அகச)

நாவாலுன் வாய்ப்பறையை நாடிமுழக்குன்னை
நாவாய்ப்புலவனென நாமுரைப்பா—நாவாயுந் (அகரு)

141 548

தோற்றிக் கடலுழிக்கச் சொல்லுதலுஞ்சூசையடி
* யேற்றுதலுமுற்றதனா லேற்குமெனச்—சாற்றினும் (அகசு)

## வேதமென்பதின் வியார்த்தி.

வேதமெனுமொழிக்கு மெய்யுணர்வின்றேர்ச்சியன்றி
யோதப்பொருள் பிறிதொன்றுண்டுகொலோ—வேதத்தை

மெய்வேதமென்று விதந்தால் வேதத்துணர்வு
பொய்யுணர்வென்றன்றேபொருள்பயக்கு— மெய்யென்றுஞ்

சத்தியமாமென்றுமடை சார்த்தினால்வேதமத
சத்தியமாம்பண்புள்ளதாய் முன்னைச்—சத்தியந்தான் (அகஎ)

---

* பின்னைத்தூது பாயிரத்தில் வளமாமுனி தோத்திரம்.

மாண்டுவிடுமுண்மையுன்றன் வாயாரவைவிலினை
மாண்டிலாமாண்டமறையென்றே—யாண்டனையாற் (அஉ0)
574

புத்தகமென்னும் பெயரைப் போற்றுவைவில் வேதத்தோ
டொத்த தலவென்றே யொதுக்கினையோ—சத்தியத்தை
566—575
மாறிப்பெருமைசொல்லிவைத்திருந்தால் வல்லோர்க
டேறித்தெளிவரென்று செப்பினையோ—கூறிடுதி (அஉஉ)

## தாஸ்யுல்லங்கன பரிகாரம்.

வேசிக்குந் தாசிக்கும் வித்யாசந்தேராது
பேசுமெடுப்பார்கைப் பிள்ளையே—தேசுடைய (அஉங)

தெத்தைகிரீதையொடு சீர்விருதைமெய்த்தவஞ்செய்
பத்தையிருதை முதற்பாவைவகுப்—பத்தனையு (அஉச)

மாலயத்திற்கன்னிமையே யாதரித்து மாகமமா
நாலயனுசரித்து நோன்புடைமை—யாலவரே (அஉரு)

தேவடியாரென்று மருட்சேயிழையா ரென்றுமுயர்
பாவடியாலேபுகழப் பட்டிருந்தார்—பாவ (அஉசு)

வலியாலவர்கள் வருக்கமனைத்துங்
கலியாலொருங்கே கழிந்து—மெலிவா (அஉஎ)

யருட்பெண்டி ரின்மையரே யாகவஞ்சாரப்
பொருட்பெண்டிரப்பெயரும்பூண்டார்-மருட்பாலாற் (அஉஅ)

பேரொன்று பெற்றதலாற் பேதையரைத்தேவரடி
யாரென்று பூசிப்பா ராருமிலைத்—தேரிதனுற் (அஉகூ)

றேவுமிகழ் வெய்துமோ தேவாலயத்திகழ்வு
மேவுமோவீண்வாதேன் மேற்கொண்டாய்—கோவிலுளே

மற்றவர்போற் பாவிகளும் வந்ததனாற்கோவிலுக்கே
குற்றம் வந்து நேர்ந்ததெனக் கூடுமோ—மற்றுமது (அகூக)

பாவஞ்செய்வோரைப் பரிட்சிப்பான் வைத்திருக்குங்
காவலெனக்கொண்டாற் கசடென்னே—நீவிரினி (அகூஉ)

யாண்பெண்கள்கூடியோ ராலயத்திற் போய்த்தொழுகை
யாண்போகமித்தியை யாற்றுவர்யா—ராண்பிளேகள் (அகூங)

கைதீண்டிப்பெண்களது கைகுலுக்கனன்மையதோ
மெய்தீண்டன் முற்றும் விலக்குமெங்கள்-பொய்தீர்ந்த (அகூச)

மார்க்க நிலேகாணுய் மயங்கினை யுன்றனது
மார்க்க நிலேயுள்ளே மதித்துரைத்தாய் பார்க்குங்கால் (அகூரு)

588.
குமரக்களிற்றையல்குற் கொப்பத்திற்றள்ளி
யமரவவர்சீரமருந்தி—யுமிழுவெனின் (அகூசு)

மும்மதமுமேற்றி முகமுடிச்சிறைப்படுத்துங்
கொம்மை முலேக்கன்னியராற்கூடு மன்றித்—தம்மதம்பேர

யீட்டுபொருளொன்றினையே யெண்ணியதன் மேன்மனதாக்
கூட்டுபொருட்பேதையராற்கூடாதே—கோட்டியொழி

சமாசமத்வதீபிகை.

பாலேயையானேக்கு நிகர்பண்ணலெனை நின்மதத்தோ
னேமிலாவெம்மதத்தை யொப்பாக—நீநினேத்துக் (அகூஎ)

631—632
கண்ணிரண்டாக்கொண்டொன்றிற்காயுஞ்சுண்ணும்பிட்டு
வெண்ணெயை மற்றொன்றிட்டுவித்யாசம் பண்ணனன்றே

வென்றாய்கலுழனுக்குமீக்கும் பறைவைப்பே
ரொன்றாங்கலுழனே யீயொக்குமோ—நன்றாகக் (அசக)

கண்ணுடையரென்பவர்கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர்கல்லாதவரென்று—நண்ணுகையாற் (அசஉ)

கண்ணது தான் மெய்ப்பொருளைக் காட்டுகின்றதற்சமயம்
புண்ணது மெய்காட்டாகின் புன் சமயம்—புண்ணுக்குச்

சுண்ணம்பிட்டாலே சுகந்தரும் வெண்ணெய்யை யிட்டாற்
பண்ணுதோமிக்கபருவரல்தா—னெண்ணுதிநீ (அசச)

கண்ணுக்கு வெண்ணெயிட்டோங் கண்ணைப்பகைத்தெழுந்த
புண்ணுக்குச் சுண்ணம்பு பூசினங்காண்—நண்ணிச் (அசரு)

579-580-186-193-200-240-278-315-316-317-513-598.
சமத்துவத்தையெய்த வெகுதாக முற்றுயர்ந்த
நிமித்தமொருசிறிது நேர்வாஞ்—சமத்வஞ் (அசசு)

சிவமதத்தேம்யாமுன்னர்ச் சேர்ந்தவிலங்கற்ற
சிவமதத்தோய் நீதேர்ந்து செப்பு—நவமாங் (அசஎ)

நிரந்தகர்த்தாயாங் நிரந்தவீறு விலங்குற்ற
நிரந்தகர்த்தாநீ நிருபைதானே—சுரந்தளிக்கு (அசஅ)

மாரணத்தேம்யா மாதி யற்றதன்றேன் மஃகான்சே
ராரணத்தாய் நீயகண்டா கண்டபரி—பூரணமே (அசக)

சேர்ந்தபதி யுண்டெமக்குச் செப்புபதி முன்தகாஞ்
சேர்ந்தபதி யுண்டுனக்குச் செய்யபுக—ழார்ந்தமைந்த (அருo)

சைவமார்க்கத்தேம்யாஞ் சைவமுன்பின்னுனபெருஞ்
சைவமார்க்கத்தாய்நீ சம்பந்த—மெய்தினவாற் (அருக)

631
நலதாடிக் கோர்சிகைக் காய்தானென் றுய்கிழே
மலிரோமத்துக் கேதோமற்றிக்—கலியுகத்திற் (அருஉ)

## கலிவஞ்சராபவாத விமோசனம்.

647—657

றிங்கடிதி வாரந்திரியுமென யார்மொழிந்தார்
தங்குமுன்னைச் செல்யுகங்கடன்னிலே—யிங்கிந்நாட் (௮௫௩)

பாவம் பெருகுதல்போற் பாவமிகாபுண்ணியுமே
தாவமிகும்பாவந் தணிகுற்று—மேவிநிற்குங் (௮௫௪)

காலரைமுக் கான்முற்றுக் காணுங்கிரேதாதி
நாலுயுகத்தும் பாவ நண்ணியிடு—மேலதுபோற் (௮௫௫)

* புண்ணிய முக்காலரைகால் பொன்றவென நான்கிற்கு
நண்ணுமென்று நூல்க ணவின்றிடுங்கா—ணெண்ணுகினே

† இற்றைக்கிருபா னாண்டின்முன் னிந்நாட்டவர்செய்
குற்றமுமிந்நாண்மலிந்த குற்றமுநீ—சற்றுணர்ந்தாற் (௮௫௭)

காணலாங்கள்ளின் கணக்குஞ் சாராயமெனு
மாணலாப் பான வகைக்கணக்கும்—வேணதுள (௮௫௮)

விவ்விடயங்கொண்டு முற்றுமெண்ணியக்காற் பாவமிந்தக்
குவ்விடை.மேற்கொள்ளுங் குறிப்புணர்வாய்--செவ்வைபெறு

‡ நின்னூரிற்சில்லாண்டா நின்சமயமுங்குறைத
லென்றேசொல் புண்ணியத்தினேற்றமோ—முன்னஞ்

---

* முதலய விடைகடை மொழிய நின்றிடுஞ், சதுர்வித யுகந்தனிற் றருமத்தின்றிற மிதுவென நான்கு மூன்றிரண் டொன்றாகியே, பதமுறை யூன்றியே படியிற் சேருமால். கந்தபுராணம். ததீசியுத்தரப்படலம். 307.

† 1864௵ இவ்விராஜதானியில் நடந்தகுற்றம் 141906.
1884௵ ௸ ௸ 218279.

‡ சுதேசமித்திரன் 1885௵ ஜனவரி௴ 1௳ பக்கம் 224.

* சிறுத்தநிலைக்கட்புதுமை செய்தோமெனுநீர்
பெருத்தநிலைக்கண்மாட்டாப் பெற்றி—குறித்துணராய்

677-678-679

ஆண்டளவைகூறி யுகத்தாபாசங்காட்டுதல் போற்
பூண்டாயாபாசப்புலவனே—யாண்டதனைச் (௮௬௨)

|| சூரியசித்தாந்தமென்று சொன்னாயேயக்கணக்கே
யாரியசித்தாந்தத்தடங்கினகாண்—காரியமா (௮௬௩)

நான்கியுகவாண்டினையுநான்குசம பங்காக்கி
வான்கணிதத்துக்காவகுத்தனர்கா—ணேன்கலதி (௮௬௪)

கிரகமாமஞ்சரிப்பேர் கேழ்கிளருநன்னூல்
கிரகநிலைநாடிக்கிளக்கத்—தரமமைத்து க (௮௬௫)

தேவமானத்தாற்றிகழ் தருமாண்டாக்கியதைப்
பாவமுறவைந்திற் படுத்ததுகா—ணாவதனாற் (௮௬௬)

சூரியசித்தாந்தத்திற் சொற்பமுந்தப்பாதளவை
நேரியம்புமாண்டே நிலைநிற்கும்—பாரிற் (௮௬௭)

---

* அப்போஸ்தர் II. 45. III. 1-8. V. 12. IX. 40.

|| கலிவற்சர அட்டவணை.

| யுகம். | சூரியசித்தாந்தம். | ஆரியபடசித்தாந்தம். | கிரகமஞ்சரி |
|---|---|---|---|
| 1. | 1728000 | 1080000 | $960 \times 360 = 345600 \times 5 = 1728000$ |
| 2. | 1296000 | 1080000 | $720 \times 360 = 259200 \times 5 = 1296000$ |
| 3. | 864000 | 1080000 | $480 \times 360 = 172800 \times 5 = 864000$ |
| 4. | 432000 | 1080000 | $240 \times 360 = 86400 \times 5 = 432000$ |
| | 4320000 | 4320000 | $2400 \times 360 = 864000 \times 5 = 4320000$ |

879

பவுஷ்யோத்திரத்தினிடைப்பாரெனுநீகண்ட
புவுஷ்யோத்திரங்காட்டிற்பார்ப்பாம்—பவிஷத்துதான் (௮௬௮)

றப்புக்கணக்கெழுதத் தக்கவுன்போல்வார்காட்டுந்
தப்புக்கணக்கெழுதித் தள்ளுண்டாய்—செப்புகின்ற (௮௬௯)

$ துத்துத்துச் சாமிபிள்ளை சொன்னபுத்தியன்றியுன
தொத்தபுத்தியன்றே லொதுக்கிவிடு—நத்தியே (௮௭௦)

இத்தேயந்தன்னி லுங்க ளேசுபோர்த்துக்கீசு
லுத்தேரிங்க்லீஷா னுழைந்ததன்றிப்—பித்தேறி (௮௭௧)

யாயிரத்தெண்ணூற் றிருபானுண்டி னுழைந்தானென்னும்
வாயிக்கலிக்கணக்கை மாற்றுதோ—போயிறந்த (௮௭௨)

* கன்னிமரி யாண்மனையுங் கால்கொண்டெழுந்துசென்ற
தென்னுநீசொல்லாத தென்னையுள—வின்னும்பல (௮௭௩)

காலப்புரட்டுங் கதைப்புரட்டு நூற்புரட்டுஞ்
சாலப்புரட்டிச் சகப்புரட்டே—கோலிச் (௮௭௪)

சிறுவர்மணற் சோற்றையுண்டு தேக்கிடல்போற்றேக்கிற்
பெறுவதுதானென்னையோ பேசாய்-சிறுவரொத்துப் (௮௭௫)

$ முத்துச்சாமிபிள்ளை, இவர் சுமார் 50-வருஷங்கட்குமுன் சென்னைத்தமிழ் முன்ஷியாயிருந்த ஒரு கிறிஸ்தவர். வீரமாமுனிவர் சரித்திரப்புறக்கடையென்று, இவைபோற்பலவற்றைச் சித்திரித்தனர்.

* தேம்பாவணி புரோகிதப்படலம். 26-27-28-29.

## பிள்ளைசதுர்தின பேரிசைவு.

பிள்ளைமதியாற்கோலு பெய்மதநுஞ்சாற்றுதுசொலப்
பிள்ளை யிசைவுபெறு மென்றே—கிள்ளை (அஎ௬)

மதுரமொழிபண்பு வனைப்பிலற்றிற்கெல்லா
மெதிர்மறையர்க் காக்கையிருந்த—லதுகொண்டு (அஎஎ)

பிள்ளையெனக்காக்கையிலைப் பேசல் கடைப்பிடித்தோ
பிள்ளைவிடு தூதிசைவாப் பேசினாய்—பிள்ளைகடாம் (அஎஅ)

நாடாளுமன்னவனை நாடியெதிர் வந்தணுகிக்
கோடாதபுத்தியே கூறுகினும்—போடாபோ (அஎகூ)

அம்மாவுடன் சொல்லி யாக்கினை செய்விப்பேனீ
சும்மாவிருவென்றே சொல்வனவா—மிம்மாற்ற (அஅ௦)

மொப்பவுயர்வாப்பேசியூன முற்றகாலுக்குத்
தப்பைவைத்துக்கட்டிச் சலித்தனையாற்—றப்புரையாம்

மண்சுவரைமண்ணமண்ண மண்ணாய்வருமன்றி
யொண்சுவரதாக்குதலுக் கொண்ணுமோ—வுண்மையினை

எவ்வாறுநோக்குகினு மேசுமதமூதறிஞர்க்
* கொவ்வாதுவாலிபர்கட்கொவ்வுங்காண்—செவ்வே (அஅ௩)

## கூட்டஞ்சிரேட்டமாகாதெனு முவமை.

616
யிருப்பதைக்கண்டன்றேவெண்ணிறந்தகூட்டம்
விருப்பமுடன் மேவுமெனவிண்டாய்—திருப்புகழ்சேர்

---

* சுதேசமித்திரன் 1885ளு ஜூலைமீ 2உ பக்கம் 75.

சைவங்குறைந்துன் சமயம்பெருகுதற்குத்
தெய்வச்செயல்காலஞ் சேர்த்தாலு—மெய்தி (௮௫)

மெலிவுபோற்சைவநீ மேற் கொளப்பின்வாங்கல்
புலியானது பதுங்கல் போலாம்—மலிவாக் (௮௬)

குருத்துவமாம்பல்வேலி கோலியுங்கண்மார்க்க
விருத்திசெய்வீர் செய்யாதுவிட்டாற்—றரிக்காது (௮௭)

காப்பின்றிநீயிர் கரித்துண்டுஞ்சைவமது
கோப்பிற்சிறிதுங் குலையாதே—யாப்பி (௮௮)

னுலகின் மலிந்தவெலா முத்தமமோசெம்பொன்
னிலைகுறைந்துந்தாழ்வுபட்டோ நிற்கு—மலைகடருன் (௮௯)

பென்னம்பெரிதே யெனினுஞ் சிற்றூறலென
கன்னீர் மனிதர்க்கு நல்காதென்—றன்றோர் (௯௦)

நவின்றதுமுட்கொள்ளாய் ஞமலியென்புகௌவிக்
கவல்வதெனக்கூட்ட நிலைகாட்டி—நுவல்வுற்றாய் (௯௧)

மற்றோ ருவமைகொண்டு வாதாடு நின்வாயை
முற்றாகவிங்ஙனே மூடுகிற்பாஞ்—சற்றேகேள் (௯௨)

கள்ளியென்றுஞ் சப்பாத்துக் கள்ளியென்றும் பட்டைநத்துக்
கள்ளியென்று நாகபடக் கள்ளியென்றுந்-தெள்ளியே (௯௩)

கூறிவகுத்தோதுகள்ளிக் கூட்ட மேசுப்பெயரா
மாறிவந்ததென்று மதிக்கலாம்—மீறிக் (௯௪)

குமரிபெற்ற பிள்ளையெனக் கூடுங்குலைகப்பா
லமரும் பிறப்பிடமதாக—நமரின்றி (௯௫)

யாவியாலுண்டாகி யாவியாலே வளர்ந்தங்
காவிப்புறவுற்றடுத்தமர—மேவிப்பு (௯௬)

ஈட்டரச ரக்குலத்தை நாசமுறுவித்தாலும்
போட்டிகொண்டு வேற்றூரிற் போயொளிக்கு—மீட்டுமது

காகத்துயிருட் கலந்திறங்கும் பாரிடத்தாற்
சாகும்படிமலைமேற் சார்த்திடினுந்—தாக (௮௯௮)

மடக்கலுறுந்தண்ணீ ரருந்தாமற்பன்னாட்
கிடக்குந் தலைகீழாத் தள்ளி—முடக்குகினு (௮௯௯)

மெள்ளினுமஞ்சி யினைந்துபணி யாதியார்க்கு
முள்ளின்முனை நீதிசொலி முன்னிற்கும்-வெள்ளமிக்க (௧௦௦)

தண்ணீர் மிசைநடக்குந் தாய் * கத்தைமேற்படரு
வெண்ணிறமாங்குட்டம் விலக்குவிக்கும்—புண்ணனைத்து

மாற்றியிடுநோய்க ளகற்றியிடு முட்கொண்டாற்
றேற்றியிடும் பல்லுயிர்தற் சூழ்ந்தமருந்-தூற்றியதைப் (௧௦௨)

பார்ப்பார்கள் கண்ணிற் படாதுபடும் பட்டிடினுங்
கூர்ப்பாக வுள்ளெரிவு கொண்டிருக்குந்—தீர்ப்படைந்தும்

முண்முடிமேல் வாய்ந்திருக்கு மொத்தன்னுங் குத்தன்னுங்
கண்முனுறு கள்ளர்களுங் கள்ளியெனப்—புண்படைக்க

வேசுப்பேர் பூணுமுயர்த் தேற்றவேறுங்கழுவிற்
கூசுமேலீயென்றுங் கூப்பிடுமோன்—மூசிக் (௧௦௫)

குழிவெட்டி மண்ணதனைக் கொட்டிமறைத்தாலு
மொழியா நாண்மூன்றி லுயிர்க்கும்—வழியின்கண் (௧௦௬)

வேலியாயாடுபல மேய்தலுற மேவியகத்
தோலிக் காயுஞ்சிறிது தோற்றுவிக்கு—மாலித்துப் (௧௦௭)

---

* கத்தை ஓர்கொடி.

பஞ்சமருந்தப் பழமதுதந் தாதரிக்குந்
தஞ்சமுறும் பாப்புத் தலைமிதிக்கு—மிஞ்சியே (கூ0அ)

தன்னைப்பணியாக்காற் றைக்குந்தன் சிற்றினமே
மன்னிப்பெருக வளர்ப்பிக்கு—மென்னவிதஞ் (கூ0கூ)

செய்தாலும்போகாதித் தேயத்திந்நாட்படரு
மைதாம்பயிலா யழித்தடக்கு—மெய்தாக்கிற் (கூக0)

கூரியக்கவாணியையுங் கொள்ளுங்கனிசெந்நீர்
சோரியது கையடையாத் துய்ப்பிக்கும்—பாரிதனுன் (கூகக)

மிக்கதகுமிக்ககுழு மேவுமென நீ புகழ்ந்த
வக்கவுரவந்தா னழிந்ததுபார்—மிக்கவரா (கூகஉ)

* லேசுவெனக் கூறுமவன் யாவனென நும்மர்மேல்
வீசம் வினவின்னும் விடையடையா—மாசகலக் (கூகங)

கள்ளியேயாமென்னக் காட்டி விடைவிடுத்தாந்
தெள்ளத்தெளியத் தெளிந்திடுதி—கள்ளமிலா (கூகச)

பூதமதோற்பவகால விவாத நிராசம்.

தாயிரத்தை நான்குமடங்காக்கிய வாண்டேயுலகி
னியிர்குழாம் பெற்றதென்று நேர்ந்துரைத்தால்—வாயடித்து

வெல்லப்பார்த்தாயஃதுன் வேதமெனும் புத்தகத்திற்
சொல்லப்படிவெமர்மேற் றேடமேன்—சொல்லக்கேள்

பிரளயம்வந் தற்றெழிந்த பின்னரன்றோ நீயிர்
திரளினரா யிம்மதத்தைச் செய்தீர்—புரளியே (கூகள)

* இது, தியாபி சங்கத்தார் பிரசுரித்த வோர் பிரபந்தப்பெயர்.

ளையாயிரத்தெழுநூறுங் கெழுநான்காண்டேநீர்
கையாண்ட மொத்தக் கணக்கதனு—ளையவே (௯௧௮)

$ யாதாமுதலாயிரத் தறுநூற்றைம்பத்தா
றோதாண்டி னோவா வுயர்சலதி—மீதான (௯௧௯)

லவ்வாண்டை நீக்கவரு மாண்டது நான்காயிரமே
இவ்வாண்டை நீயே னிகழ்ந்துரைத்தாய்—தவ்வாது (௯௨௦)

கண்குற்றங் கண்டானே கண்டிடுமேலுன் னூலி
னெண்குற்ற நீயு முணருகிற்பாய்—கண்மூடி (௯௨௧)

வண்பொரு ளென்றோதேகோ வாவுண்டு மத்தியஸ்தப்
* பெண்களெனவோதேசுப் பிள்ளையுண்டு—புண்கொடுக்கும்

பஞ்சமென்றுசொல்லும் பரிசுத்தவாவியுண்டுண்
டெஞ்சலுறு துன்மதமென் றெண்ணினைகொல்—கொஞ்சிப்

மித்தியாவாதம்.

புராணாதிகளெல்லாம் பொய்யென்றுகாட்டத்
திராணி பெற்றோன்போலச் செருக்கி—யராகமொடு (௯௨௪)

555—565
நொய்யவுரை சொற்றாயந் நுண்பொருளைக் கேட்டுணரப்
பையலுனக்கேது பரிபக்குவஞ்சொல்—பையவதைத்(௯௨௫)

தள்ளுகினுஞ்சைவங் தளரா சௌசேடியங்கள்
தள்ளுதியேல் வேறுனக்குச் சார்புளதோ—பிள்ளாய்நீ(௯௨௬)

$ தேம்பாவணி இளவன் மாட்சிப்படலம் 98.
* சுதேசமித்திரன் 1885௵ ஜூலை௴ 23௳ பக்கம் 93.
ஷை ஷை ஷை 9௳ பக்கம் 78.

பித்தந்தெளிந்ததினிப் பேய்போயிற்றுதலினற்
ருத்துநின்ற பேருலக்கை கொண்டோ - வெற்றரையின் (கூ௨எ)

கீழுடையாக்கட்டக் கிழிக்கலாமென்றுலகில்
வாழும்பழமொழிக்கு மாண்பாக—வேழையாத் (கூ௨அ)

தன்றலைவெட்டுண்டுஞ் சம்டன்றில் கக்கத்தே
தன்றலையைவைத்துவழி தானடந்தான்—முன்பதுபோன்

மற்றொருவனுஞ்சென்று வாவினுழியென்றும்
வெற்றுந்தரை யொருவன் மீன்பிடித்தான்—பற்றியென்றும்

வேறொருவனுஞ் சவ்வேரியென்பானுக்கு நா
டோறு நகமயிர்க டோன்றுமென்று—மீறடைந்த (கூகக)

யோவான்றலையு முறுப்புகளுங் கன்னிமரிப்
பாவைமயிரோடு முலைப்பாலுமின்ன—மேவுமென்றுங் (கூக௨)

தென்னைமரத்தினிலே தேளிருந்துகொட்டநெறி
மன்னிப்பனைமரத்தில் வந்ததையு—மின்னங் (கூகங)

குறத்திவருந்திச்சூற் கொண்டு பிள்ளையீனக்
குறவன் மருந்தினையுட்கொண்ட—திறத்தையும்போ (கூக௪)

* லாதாமேவாள் செய்யரும்பாவ மாருயிர்பாற்
போதருமாமென்றும் புமானின்றி—மாதிடத்தி (கூக௫)

$ லென்புதசைதோ னரம்பிரத்தம் பொருந்துமுட்
லன்பாயளித்ததோ ராவியென்றும்—வன்பாகப் (கூகசு)

---

* தேம்பாவணி திருமணப்படலம் 2.

$ ஷை கருணையன் மாட்சிப்படலம் 5.

## பிள்ளையின் சூது.

பொய்பேசியாங்காரம் பொங்கிக்கிளர்ந்தெழுந்து
மெய்பேசுவாரை விரோதித்து—நெய்பூசி (௯௩௭)

யுண்டுகொழுத்தாரொருவ னூரிலிராரெனுண் புலம்வாழ்
கண்டுகொழுத்தால் வளையினண்ணுந்து—மண்டுமென்ற (௯௩௮)

மாற்றத்திற் கேற்ப மறுப்புரைக்குந்தாதென்று
தோற்றிக்கல்லாரே துணுக்கமுறச்—சாற்றிவிட்டு (௯௩௯)

நீயும்புலவரோடு நேரெதிர்த்துப் புல்லியர்பான்
மாயும்புகழ்சிறுது வாங்கினையே—சாயு (௯௪0)

மூலதிருகியுன்னு முகத்தாய் நீ பாட்டின்
தலைதிருகி வேறாக்கித் தந்தனையே—கலையதனுட் (௯௪௧)

பாக்களவுகூட்டப் பயிலாமுன் பாவலர்தம்
பாக்களவுசெய்யப் பயின்றனையே—வாக்குப் (௯௪௨)

பகராதிருக்கும் பருவத்தே பாப்போ
லகராதியாலே யுண்டாக்கினையே—பகருமுன்னைப் (௯௪௩)

பொய்யிருப்பும் பத்திரிகைப் பொக்கிஷமும் நீயீட்டுங்
கையிருப்பு மொக்கக் கவிழ்த்தனையே—பையவொல்கி (௯௪௪)

யன்னநடைபோனடக்க வாரம்பித்தாயதனன்
முன்னடையும்போக முடுக்கினையே—யொன்னார்மேற்

கல்லெறிந்து கொல்லவல்ல கத்தோலிக்கக் குழவீ
சொல்லெறிந்து வெல்லத்துணிந்தாயோ—மெல்லவே (௯௪௫)

கத்திமுனையாற்பொருதுங் கத்தோலிக்கக் குழவீ
புத்திமுனையாலும் பொருதுவையோ—குத்தியருங் (௯௪௭)

காயத்திறூற்போர்செய் கத்தோலிக்கக் குழவீ
ஞாயத்திறூற்போர்க்கு நண்ணுதியோ—வாயகலி (கூசஅ)

காலத்தைக்கொண்டெதிர்த்த கத்தோலிக்கக் குழவீ
சீலத்தைக்கொண்டெதிர்க்கத் தீராதே—ஞாலத்திற் (கூசகூ)

காசுடைமை யாற்போந்த கத்தோலிக்கக் குழவீ
தேசுடைமையீற்போருஞ் செய்வாயோ—தேசத்துக் (கூரு0)

காவலர்சார் புற்றுவந்த கத்தோலிக்கக் குழவீ
பாவலர்சார் புற்றுவரப் பார்த்தாயே—மேவிக் (கூருக)

கழுத்துப்போர் செய்வதற்கே கற்றநீயெவ்வா
றெழுத்துப்போர்செய்தற் கெழுந்தாய்—முழுப்பரிவா (கூருஉ)

## கடைமொழி.

ஓன்வேத நூல்கற் றுலகமுடிவென்றுகத்திப்
பின்வாங்கி வெட்கமுற்ற பேர்சிலரோ—மின்வார்ந்த (கூருங)

மேகத்திலேசுவந்து மேவுநாள்வந்ததென்று
நாகத்தைப்பார்த்து வெட்கினோர்சிலரோ—மோகித்தே (கூருச)

மேசியாமேசியா வென்றெண்றெழுந்துவந்து
பேசியிறந்தொழிந்த பேர்சிலரோ—மூசுகின்ற (கூருரு)

கல்லறையிற் செத்தபேர் காத்திருப்பாரென்றுசொலி
மல்லரைப்போல் வாதாடுவார்சிலரோ—செல்லுஞ் (கூருசு)

சிலுவைதலைச்சுமந்து செத்தோர்சிலரோ
சிலுவைப்பூண் பூண்டோர் சிலரோ—சிலுவைப் (கூருஎ)

பெரும்போர்செய்தாவி பிரிந்தோர் சிலரோ
வரும்போரின் மாண்டோர் சிலரோ-அரும்போர்செய் (கூருஅ)

மோட்சத்துச்சேனையென்று மூண்டோர்சிலரோ
தாட்சணியமில்லாமற் சாற்றினன்—மாட்சிமைபோ (௧௫௯)

மின்னு நீ தூதுக் கெழுவாயேன் மற்றவெலாம்
பின்னணிசைப்பதற்குப் பேணிவைத்தா—மென்னே (௧௬0)

மாற்றலர் முன்கூசை மலர்க்கொடி யேந்திச்சென்றாற்
றோற்றழிவானென்று தொலைத்ததுவிட்—டேற்றுங் (௧௬௧)

30
குருசிற்கொடிபிடித்துக் கொண்டுவந்தும்பெற்ற
பரிசிதுவோ வையையோ பாவம்—வரிசையுற்றுச் (௧௬௨)

702—708
சோதரர்கள்செய்த தொழுகை யழுகையதாப்
போதரின்மற்றேதோ புகலிடந்தான்—றூதுக் (௧௬௩)
709
கருள்சுரக்கச் சூசையினலாகா திழுக்கா
மிருள்சுரக்க வைத்தானே ஏழா—யொருவனுக்குப் (௧௬௪)

* புண்கொடுத்தவேசு புகலடைந்த நிற்கும் மனப்
புண்கொடுக்கவுந் தப்பிப்போவானோ—திண்கொடுக்கு (௧௬௫)

$ முத்தரதண்ட மொழிந்துவணங்கிப் புகழும்
புத்திரதண்டமாதாப் போயினவே—குத்திரஞ்சேர் (௧௬௬)

பிள்ளைவிடுதூது பெரிதும் பிழைபட்டு
நொள்ளைபடுதூதாக நோக்கிற்றே—யுள்ளம் (௧௬௭)

நிலைகவிழ்ந்து வாய்தப்பி நீ மொழிந்தவாறே
தலைகவிழ்ந்து நின்றாய் சரதம்—வலைகவிழ்ந்த (௧௬௮)
50

* பிரான்சிஸ்கு அடைந்த பஞ்சகாயம்.
$ பிள்ளைத்தூது 369. கீழ்க்குறிப்பு
௸ சூசிகாபத்திரம் 13-ம் பக்கத்தின் சூசனை.

மான்போலச்சிக்கி மயங்காது நீயும்பு
மான்போலாதற்கு வழியுரைப்பார்—தேன்போலக் (கூகூகூ)
698

கல்லாதவருநனி நல்லர் கற்றார்முற்
சொல்லாதிருக்கப் பெறினென்ற—நல்லுரையாற் (கூ௱௦)

கூசாதுபற்பலவுங் கூறாது நாவடங்கிப்
பேசாதுபோ நீ பிளாய். (கூ௱௧)

வாழிவெண்பா.

வாழிதிருப்பேரூர் வாழிபட்டி நாதர்பதம்
வாழியிடமேவு மரகதத்தாய்—வாழியென்றுஞ்
சுந்தரஞ்சேர் கிள்ளைவிடு தூதெனும்பாமாரிபொழி
கந்தசாமிக்கவிமேகம்.

திருச்சிற்றம்பலம்.

சிசுதௌத்திய திரண சண்டமாருதம்

முற்றிற்று.

## விஷய சூசிகை.

# விஷய சூசிகை.



## புடாட்சரங்கள்.

| | |
|---|---|
| பிள்ளைத் தூது. | பிள்ளைவிடு தூது. |
| கிள்ளைத் தூது. | கிள்ளைவிடு தூது. |
| கண்ணிகளின் அடிதோறும் மேலும் கீழும் குறித்த இலக்கங்கள். | பிள்ளைத்தூதின் கண்ணிகள். |
| ——— இந்தக்குறி. | முதற்கண்ணுள்ள இலக்க முதல் ஈற்றுக்கண்ணுள்ள இலக்கம் வரையில். |

என்க, மற்றது வெளிப்படை.